# மனுநீதி சோழ மகாராசா நாடகம்


பதிப்பாளர்

**ம.அ. மணிமேகலை**

நெறியாளர்

**முனைவர் வீ. அரசு**

பேராசிரியர்



**தமிழ் இலக்கியத்துறை**

சென்னைப் பல்கலைக்கழகம்

சென்னை-600 005.

2011

# மனுநீதி சோழ மகாராசா நாடகம்

*"சுவடியியலும் பதிப்பியலும்"*
*பட்டயப்பேற்றிற்காகச்*
*சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு*
*அளிக்கப்பெறும் பதிப்பேடு*

பதிப்பாளர்
**ம. அ. மணிமேகலை**

நெறியாளர்
முனைவர் **வீ. அரசு**
பேராசிரியர் - தலைவர்
தமிழ் இலக்கியத்துறை

**தமிழ் இலக்கியத்துறை**
**சென்னைப் பல்கலைக்கழகம்**
பரிதிமாற் கலைஞர் வளாகம்
சென்னை - 600 005
2011

சுவடியியலும் பதிப்பியலும்

பட்டயச் சான்றிதழுக்காகச்

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு

அளிக்கப்பெறும் பதிப்பேடு.

எண் : 43011054

**முனைவர் வீ.அரசு**

பேராசிரியர் - தலைவர்,
தமிழ் இலக்கியத்துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை - 600 005.

# *நெறியாளர் சான்றிதழ்*

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறையில் நடைபெற்று வரும் *"சுவடியியல் பதிப்பியல்"* பட்டயப்பேற்றிற்காக 2011 - 2012 ஆம் கல்வியாண்டில் **மனுநீதி சோழ மகாராசா நாடகம்** எனும் தலைப்பில் உருவாக்கப்பட்டுள்ள இப்பதிப்பேடு என்னுடைய மேற்பார்வையின் கீழ் முதுகலை மாணவர் **ம.அ.மணிமேகலை** அவர்களால் அவரின் சொந்த முயற்சியில் உருவாக்கப்பட்டது என்று சான்றளிக்கிறேன்.

நெறியாளர்,

(வீ. அரசு)

நாள் : - - 2011

இடம் : சென்னை - 600 005.

**ம. அ. மணிமேகலை**

தமிழ் இலக்கியத்துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை - 600 005.

# *பதிப்பாளர் உறுதிமொழி*

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறையில் நடைபெற்று வரும் *"சுவடியியலும் பதிப்பியலும்"* எனும் பட்டயச் சான்றிதழுக்காக **"மனுநீதி சோழ மகாராசா நாடகம்"** ஆனது என்னுடைய சொந்த முயற்சியில் பதிப்பிக்கப்பட்டது என்றும் இது இதற்கு முன்பு வேறு எந்தப் பட்டயத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

பதிப்பாளர்,

(ம.அ.மணிமேகலை)

நாள் : - - 2011

இடம் : சென்னை - 600 005.

# உள்ளடக்கம்

| | பக்கம் |
| --- | --- |
| நன்றியுரை | 11 |
| பதிப்புரை | 13 |
| நாடகம் | 23 |

# *நன்றியுரை*

"*சுவடியியலும் பதிப்பியலும்*" என்கிற பட்டயப் படிப்பில் சேர்வதற்கு வாய்ப்பளித்த சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறைக்கு முதற்கண் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்பட்டயப் படிப்பில் செம்மையான முறையில் பயிற்சியளித்த **பேராசிரியர் வீ. அரசு** மற்றும் **உதவி பேராசிரியர் முனைவர் ய. மணிகண்டன், முனைவர் சி. இளங்கோ, முனைவர் லதா** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

நெறியாளர் என்கின்ற முறையில் இத்தலைப்பினைத் தேர்ந்தெடுத்துப் பதிப்பிப்பதற்கு என்னை ஊக்கப்படுத்திய **பேராசிரியர் வீ. அரசு** அவர்களுக்கு மிக்க நன்றி.

அனைத்து சூழலிலும் துணைநின்று என்னை ஊக்கப்படுத்திய என் பெற்றோர் **ம.ரமணி** அவர்களுக்கும், **சு.மதிவாணன்** அவர்களுக்கும், தட்டச்சு மற்றும் பிழைத்திருத்தம் செய்வதில் எனக்கு பெரும் துணைப் புரிந்த என் தங்கை **ம. நிலவழகி** அவர்களுக்கும், என் நண்பர்களுக்கும் எனது நன்றியினை தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் சுவடியை தந்து உதவிய கீழ்த்திசை சுவடி நூலகத்தாருக்கும், இந்த புத்தக உருவாக்கத்திற்கு உதவிய அச்சகத்தாருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

## பதிப்புரை

ஐரோப்பியர் வருகைக்கு பின்னரே இந்தியாவில் அச்சுப் பண்பாடு தோற்றம் பெற்று வளர்ந்தது. இதற்கு முன்னர் தோல், துணி, இலை, கல் போன்ற பொருட்களில் எழுதினர். இவற்றுள் ஓலைச்சுவடிகளில் எழுதப்பட்ட இலக்கண, இலக்கியங்களே மிகுதி எனலாம். வாய்மொழியாக வழங்கப்பட்டவையும் ஓலைச்சுவடிகளில் எழுதப்பட்டன.

ஓலைச்சுவடிகள் இயற்கையால் சிதைந்து போகும் தன்மைக் கொண்டது, ஆகையால் அவற்றை படியெடுத்து வைப்பது வழக்கம். மேலும் பிரதிகள் குறைவாக இருந்ததாலும் படி எடுத்தனர். ஆசிரியர் சொல்வதைக் கேட்டு நான்கைந்து பேர் படி எடுப்பர். ஊதியம் பெற்றுக் கொண்டும் ஓலைச்சுவடிகளை படி எடுத்து தருவர். இவ்வாறு படியெடுக்கும் பிரதியில் ஏராளமான பிழைகள் காணப்படும். இவையே பாடவேறுபாடு உருவாக முதன்மை காரணமாக அமைகிறது எனலாம்.

பின்னர் ஐரோப்பியர் வருகையால் வளர்ந்த காகிதம் மற்றும் அச்சுப் பண்பாட்டின் விளைவாக, ஓலைச்சுவடியில் இருப்பவை அச்சில் ஏற்றப்பட்டன. இதனால் மக்களிடையே பரவலாக ஓலைச்சுவடியைப் பற்றிய புரிதல் ஏற்படத் தொடங்கியது. இதன் விளைவாக சுவடியில்

உள்ளவற்றை பதிப்பிக்க பயிற்சி அளிக்கப்பட்டன. இந்த பின்புலத்தில் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் "சுவடியியல் மற்றும் பதிப்பியல்" என்னும் ஓராண்டு பட்டயப் படிப்பு நடத்தப்பட்டு வருகிறது. இந்த பயிற்சியின் காரணமாகவே இப்பதிப்பேடு உருவாகியுள்ளது.

### *மனுநீதி சோழ மகாராசா நாடகம்*

தன் கன்றினை இழந்த பசு மனுநீதி சோழனிடம் நீதி கேட்க, அரசன் கன்றினைக் கொன்ற தன் மகனை தேர்க்காலில் இட்டு கொன்ற கதையை கருவாகக் கொண்டதே இந்த நாடகம் (கூத்து). இது கூத்து வடிவிலேயே அமைக்கப்பட்டுள்ளது. இச்சுவடியை எழுதியவர் சாமினாத பத்தர் மகன் லெஷ்மண பத்தர் ஆவார்.

இதில் பயின்று வரும் பாடல்கள் சில விருத்தப்பாவிலும் சில ராகங்களை கொண்டும் எழுதப்பட்டுள்ளது.

*விளம் மா மா*

*விளம் மா மா*

என்ற வாய்ப்பாட்டில் பாடல்கள் எழுதப்பட்டுள்ளன.

"செப்பவே பாலன் தானுந்

திடுக்கென யெழுந்து சென்னி"

இதில் இடம்பெற்றுள்ள ராகங்களில் சில:

- ஆனந்தபைரவி
- ஆரபி
- கல்யாணி
- காபி
- காம்போதி
- கேதார கவுளம்
- சங்கராபரணம்
- சுருட்டி
- தோடி
- நாதநாம கிரிகை
- நீலாம்பரி
- புன்னகவராளி
- மத்திமாபதி
- முகாரி
- மோகனம்

*“வாயிற் கடைமணி நடுநா நடுங்க*

*ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத் தான்தன்*

*அரும்பெறல் புதல்வனை ஆழியின் மடித்தோன்”*

(சிலம்பு 20 : 53 - 55)

என்று சிலப்பதிகாரத்தில் குறிப்பிட்டுள்ள மனுநீதி சோழன் பற்றிய ஒரு வரியின் விரிவே இப்பிரதி. பதினெண் கீழ்க்கணக்கு நூலான பழமொழி நானூறு என்னும் நூலில் இக்கதை எடுத்துக்காட்டாக தரப்பட்டுள்ளது.

*“கறவைக் கன்று ஊர்ந்தானைத் தந்தையும் ஊர்ந்தான்”*

(பழமொழி நானூறு : 93)

சேக்கிழாரின் பெரிய புராணத்தில் இக்கதை விரிவாகக் காணப்படுகிறது. இராமலிங்க அடிகள் இக்கதையை "மனுமுறை கண்ட வாசகம்" என்ற தலைப்பில் உரைநடை நூலாக தந்துள்ளார்.

நீதி தவறாது ஆட்சி செய்தலுக்கு உதாரணமாக கூறப்படுவது இக்கதை. வரலாற்றில் இம்மன்னன் இருந்ததற்கான சான்றுகள் எதுவும் இதுவரை கிடைக்கவில்லை. இத்தொன்மக் கதை வாய்மொழியாக பெரும்பாலான மக்களிடையே பரவியுள்ளது. இச்சுவடியில் இக்கதை நிகழ்த்துவதற்கு ஏதுவாக கூத்து வடிவில் எழுதப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

## விக்னேஸ்வரர் துணையாக வேணும்

ஹரி ஓம் நன்றாகக் குரு வாழ்க குருவே துணையாக வேணும். எங்கள் குருவாகிய முத்துசுவாமி வாத்தியாரிடத்தில் வாசித்த சீடன் வீருமூனை தரையரிடத்தில் நாடகம் கற்பித்துக் கொண்டு மேல விடயலிலிருக்கும் முத்துசுவாமி வாயாடியார்க்கு மாறன் பாட்டு. வாயாடியார் -க- சாமினாத பத்தர் மகன் லெஷ்மண பத்தர் -உ- இவர்களால் நந்தன வருஷம் மாசி மீ யரு இந்த சோழ ராசர் நாடகம் ஏற்படுத்தி சுவடி எழுதியது.

<u>ஹரி ஓம் நன்றாகக் குரு வாழ்க குருவே துணை</u>

# மனுநீதி சோழ மகாராசா நாடகம்

## ராகம் - நாட்டை

பொங்குபுகழ் திருவாரூர் புகழ்பெருகி வளர் பதியில் புனிதரான
திங்களனித் தியாகேசர் அடிதொழுது எந்நாளும் சென்னி சேர்த்து
சங்கீத லோலன் சோழன் செந்தமிழ் நாடகத்தின் சரிதைபாட
கங்குல்நிகர் கரிமுகத்தோன் கணபதியும் இக்கதைக்குக் காப்பதாமே.

ஆத்திதனில் வீத்திருக்கும் அண்ணல்திருத் தியாகேச ரடியே
போத்தி
நேத்தியுடன் சுந்தர்க்கா தூதுசெ தலங்களெல்லாம் நேர்மை யாக
சாதிரங்கள் நெறித்தவர் மனுநீதிச் சோழனு சரிதை பாட
மாத்துரைத்து ஈன்றவெள்ளை வாரணத்தின் மலர்ப்பதத்தை

வாழ்த்து வோமே

அக்கரவு தும்பையணி ஆரூர்திரு வடியை அனுதினமும் அன்பாய்
போத்தி
திக்குபுகழ் சோழேந்திரன் தேரூர்ந்த வாசகத்தை செந் தமிழால் கூற
மிக்கபுகழ் கவிக்கடலோன் அனைவருமே ஈன்றெடுத்த பேதை
ராமன்
இக்கதையை மிக்கவெங்கும் ஆகையினால் நாடகமாய்

இயம்பினோமே

புன்னைதும்பை எருக்கணியும் திருவாரூ ரான்அடியே போத்தி செய்து
மன்னவர்க்கும்மன்னவனும்மனுநீதிச்சோழனூட மகனை ஆவின்
சின்னஇளங் கன்னுக்கா பறிகொடுத்த நாடகத்தை செந்தமிழால் கூற
கன்னல்மொழி மதியணியுங்காமாக்ஷி அம்பிகையும்காப்ப தாமே

தாரீந்த கதளி பலாகனியுடைந்து கெங்கையுடன் கலந்து வெள்ளம்
ஏரூர்ந்த வயல் பாய்ந்து எந்நாளும் மாருமலிசையுஞ் செந்நெல்
தேரூர்ந்த திருவாரூர் தியாகேசர் மலரடியை சென்னி சேர்த்து
காரூர்ந்த குழல்வள்ளி கந்தனுமே இக்கதையைக் கார்ப்பதாமே

## புள்ளையார் விருத்தம்

## ராகம் - மோகனம்

மருவளர்ம கராச ரான மனுநீதிக் குடையு கோமான்
தருவளர் நிரக்குஞ் சோழன் சரிதைசெந் தமிழால் கூற
திரிபுர மெரித்த ஆரூர்தியா கேசர் ஈன்ற பாலன்
கரிமுக னான தொந்திக் கணபதி வருகின் றாரோ

## தரு - மோகனம்

ஐந்துகரத்தோனும் வந்தான் ஆகூவிலேரி ஆனைமுகத்தோனும் வந்தான்
பிஞ்சுமதி புனலணி செஞ்சொற் தியாகேசரீன்ற உமையாள் அருங்குஞ்சர மாமுகத்தோன்
கஞ்சமலர்ப்பதத்தே செஞ்சிலம்புகள் கொஞ்ச
ஐந்துஅங்குச பாசமேந்திய கரந்தனிலே அணிந்த வளைகள் மின்னவே

பொய்குமுப்புரிநூலும்பொருந்தி சூலங்களேந்தி பொக்கணமாகவே
கைக்கணி தனக்காக மிக்கவன் தனைசுத்தி அக்கனிவாயிலிட்டு
ஐந்துதண்டைகல கலென்னவே

இருகரத்தில் தணிகைக் கடயம் மின்னவே
அண்டமுனிவர்களும் அரசர்வந்து அடிதொழ
அன்புடன் உமையென்று நம்பிய வர்களுக்கு
இன்பமது அருளிய நம் பெருமாணித்தேர்
ஐந்து விச்சித்திரமான நடையும் தங்கத்தினாலே மெலிந்க
பட்டாடை யுடையும்

பச்ச வயிரம் பூண்டு பாங்காய் நகையணிந்து
பண்பொடு நாரதர் தும்புரு பாடவே தும்பி
மோகனம் பாடி சம்பிரமதாகவே
ஐங்கரத் தோனும் வந்தார்.

## விருத்தம் - மத்திமாபதி

வந்தவர் கணப திக்கு வகையுடன் பூசை செய்ய
சிந்தையில் சிவத வத்தின் சீரதே தியான மாகி
சந்தன மலர்பூ வாடை சமஸ்தமுங் கையி லேந்தி
சுந்தர தெண்ட பாணி குருக்களுஞ் சொகுசா வந்தார்

## தரு - மத்திமாபதி

அய்யர் வந்தாரே குருக்களய்யா வந்தாரே
வய்யகம் போத்தும் வளரும் நகர்தன்னிலே
பொய்யாத மூர்த்தியே பூசை செய்யவென்று

(அய்யர்)

மல்லிகை முல்லை இருவாக்ஷி செண்பகம் மந்தாரை கொன்னை
மருக்கொழுந்துடன்
வில்வக்கிளை வெட்டிவேரு மிகக் கொண்டு விக்ஷி மலருடன்
அர்ச்சனை செய்யவே
(அய்யர்)

மோதகந் தேங்கா முறுக்கு வடையுடன் மொந்தம் பழமும் பிலாப்
பழமும் கொண்டு
சாதகமான தமர்த்தம் பழம் கொண்டு சங்கரன் மைந்தனே பூசை
வென்னு
(அய்யர்)

நித்தமும் பத்தியா அத்தர் புனுகொடு
சுத்த பஞ்சாக்ஷரம் சித்தியாக வென்று
அத்திமுகனே என்றனு தினமும் நாடி
மத்திமாபதியே மனம் மகிழப்பாடி
(அய்யர்)

## விருத்தம் - சுருட்டி

பட்டயம் பரசு கத்தி பாங்குட னிடையில் கட்டி
வட்டமா நீருஞ் சாத்தி மயங்கிடத் திலக மிட்டு
துட்டரை யடக்கும் மன்னன் சோழரா சேந்திரன் வாசல்
கட்டியக் காரன் தானும் கனசபை தனில்வந் தானே.

## தரு - சுருட்டி

கட்டியக்காரன் வந்தானே சோழேந்திரன் வாசல்
கட்டியவட்டத் திருநீறிட்டு கட்டாரி கையில் கொண்டு
பட்டை ஒதுக்கித் திட்டமாய் பாகுகட்டி

கட்டியஅங்கி நிஜாருகள் தொட்டு பொல்லாத பேரை அதட்டி
ஆக்கினைகளிட்டு இங்கிதமாய் இரைத்து
ஏழைகள் தன்னைப் பார்த்து துங்கன் சோழேந்திரன் வாசல்
சிங்கக்குட்டி நானென்று கட்டியகதலி கமுகுகட்டியே
வீதிகள் தோறும் கனத்த தோரணம் பூட்டியே
பதமாய் பன்னீரு புஷ்பம் பாங்குடனே யிரை சகிதமாய்
பூரணகும்பம்

யெங்கெங்கும் ஏந்தி நிற்க (கட்டிய)
துஷ்டலை மூக்கறுப்போம் பொல்லாத பேரை
துடுக்கென நாக்கறுப்போம்
மட்டு மிஞ்சின பேரை வணங்க சுருட்டிபாடி
அட்டி சொல்வோரையும் ஆக்கினை செய்யும் கெட்டி
(கட்டியக்காரன்)

**கட்டியக்காரன் வசனம்** - ராசாதி ராசன் ராசமார்த்தாண்டன் ராசஉத்தண்டன் ராசகோலாகலன் ராசகெம்பீரன் மணி நகரத்தை ஆளப்பட்ட மனுநீதிச் சோழ மகாராசா கொலுவுக்கு வருகிறார். ஜனங்களே எச்சரிக்கை வெகு பிராக்

- மந்திரிகள் வந்தனரே -

## விருத்தம் - கல்யாணி

மதம்பெறு வளத்தின் நாடும் மனுநீதி மன்ன நார்க்கு
யிதமகிழ் தினங்கள் சொல்லும் இசைந்தமந் திரிகள் தானும்
பதமாய் அவர வர்க்கு பாங்குடனு ரைத்துக் கொண்டு
சதமதாய் ராசன் முன்னே சமூகமந் திரியும் வந்தான்

## தரு - கல்யாணி

மந்திரிகள் வந்தனரே சகலகலை மந்திரிகள் வந்தனரே
கெந்தகஸ்தாரிகளே பொடிகள் தொட்டு செந்தூரத் திலகமும்
சிறந்த நெத்தியிலிட்டு
(மந்திரி)

முத்துமணி பதைக்கம் முருகுகடுக்கனுடன் முன்கையில்
வளைகளும் மோகனமாலைகளும்
வெத்திபுகழ் படைத்த சத்திராதி புகழ்தோறும் விண்ணவர்
கொண்டாடும் மன்னன்
- -சோழேந்திரன் வாசல் -
(மந்திரி)

தாருமாருகள் சொல்லி தனங்கொடாதிருந் தோரை தினமனிதரை
சலுதியாக விட்டு
காருபாருகள் மெட்டுக் கணக்குடன் நேசமாக கண்டிப்புடனே
வெகுதெண்டினை செய்வோமென்று
(மந்திரி)

அன்ன சத்திரஞ்சாலை ஆலயம் ஒருக்காலே
அகண்டதீபம் போலேஆகமும் எங்களாலே
யென்ன செய்வோமென்று யெளியவர் வருகையாலே
யெங்குங்கல் யாணி பாடி
துங்கன் கொலுவை நாடி மந்திரிகள் வந்தனரே

## ராசா விருத்தம் - அசாவேரி

- மனுநீதி வருகிறார் -

சமையங்க ளாறும் கத்து சாதிர விதங்க ளோடே
அமையவே கலைகள் தோறும் அறுபத்து நாலுங் கத்து

இமையவர் போத்துங் தியாகர் ஈசனே யிருத்தி நெஞ்சில்
மமதைகள் இல்லா வேந்தன் மனுநீதி கொலுவில் வந்தான்

## விருத்தம்

கொங்கணர் மருட ரான குச்சரெட்டி யார்கள் தேசம்
சிங்கள தேசத் தோருஞ் செயசெய வென்று கூற
சங்கீத வீணை வாத்தி யந்தவண்டை மல்லாரி சின்னம்
மங்களம் பாட பெண்கள் மனுநீதி கொலுவில் வந்தான்

## தரு - அசாவேரி

ராசனான மனுநீதி ராசன் சோழேந்திர மகாராசன் கொலுவில்
வந்தானே
மகாராசனான தேச தேசாதிமன்னர் எங்கும் மிகக் கொண்டாட
தெருவயர்நடமாட தேவர்கள்மலர்போட மோகனமாலை மணிகள்
துலங்கிட
முத்துச்சரப் பளி மார்பில் நிறைந்திட ரஞ்சித நடனம் விளங்க
ரணபேரிகை தான் முழங்க ரதம் அலுங்க குலுங்க
ராசனான வெள்ளைக் குடை சுருட்டி வெண்சாமரைகள் வீச
வெள்ளை விருதுகளும் வேண்டியதும் பிடிக்க
விருது சொல்லியகட்டியம் மேளவாத்தியம் படிக்க
ஒசந்த மேளதாளம் நாதம் பின்னாலே
ஒசந்த வாசனைகள் வீசும் பின்னாலே
உல்லாசம் போலே வில்லம்பு பிடித்து கையிலே
தேவேந்திரன் போல சபையிலே
ராசனான சந்திர காந்திமுகம்
சரத்குண பூபாலன் சிறந்த கோபம் தாபம் செழிக்கும் வேதப்
பிரகாசன்

மந்திர தந்திரத்தால் மகத்தாகிய சூரன் சங்கீத சிங்காரன்
சரத்குண பூபாலன் இங்கிர்த தீரன் குபேந்திரன் ராசனாம்
ஆளும் தேசங்கள் தோறும் ஆண்டவன் கிருபையாலே
அவணியிலே ராசகுலம் அவர் செய்யுந் தவத்தாலே
வாழும் உலகை நாடி வண்மை சாவேரி பாடி
நாடகசாலை நடனம் விளங்கிடபாடிய தம்புறுவீணைகள்
வாசிக்க நாட்டியம் மிகக் கூட
வசிரம்பைகள் நடமாட கீதங்கள் பாட
கொண்டாட இராசனான மனுநீதி

## ராச விருத்தம் - மோகனம்

தோஸ்த்திர மிகவே சொல்லி தொழுதுகை கூப்பிக் கொண்டு
காத்திருந் தேவல் கே(ட்)ழ்க்குங் கட்டிய காராய் கேளாய்
நாத்திசை புகழுங் கீர்த்தி நமதுடன் மந்திரி மாரை
மாத்திரைப் பொழுதில் நீபோய் வரகுடன் அழைத்து வாராய்

**வசனம்** - அகோ வாரும் புள்ளாய் கட்டியக்காரா நம்முடைய மந்திரி மார்களை அதிசீக்கிரத்தில் அழைத்து வாரும் புள்ளாய் கட்டிக்காரா

## கட்டியக்காரன் விருத்தம் - ஆனந்தபைரவி

வீருடன் ஆனை சேனை விதமில்லாத நகரத் தோர்க்கும்
தேரியே காரு பாரு செலுத்தும்மந் திரிகள் மாரே
சூரிய குலத்து தித்த சோழேந்தி ரராச ரும்மை
காரிய மிருக்கு தென்று கடுகவே அழைத்துச் சொன்னார்

**வசனம்** - அகோ வாருங்களய்யா சுவாமி மந்திரிமார்களே மனுநீதி சோழ மகாராசா தாங்களை அதி சீக்கிரத்தில் அழைத்துக் கொண்டு வரச் சொன்னாரய்யா

## மந்திரி விருத்தம் - கேதார கவுளம்

இனிதே தானே விளங்கும் கீர்த்திஇக பரமசாக் ஷியாக
தனியனாய் நின்ற சோதி யாகநார தன்னெ போத்துங்
கனிமொழி மாதர் போலே கருத்தினில் விளங்கும் யெங்கள்
மனுநீதிச் சோழ ரான மன்னவா போத்தி போத்தி

**வசனம்** - அகோ சரணம் சரணம் அடியேன் மந்திரிகள் வந்தோமய்யா சுவாமி

## ராச விருத்தம் - கல்யாணி

போத்துமந் திரிகள் மாரே புனிதமாய் விளங்குங் கீர்த்தியே
யேத்திய தீபம் போலே எனதுநற் றேச மெல்லாம்
சாஸ்த்திர உசீத மாகா தாக்ஷண்ய விதங்க ளோடே
நேர்த்தியாக காரு பாரு நேசமுடன் செய்து வாராய்

**வசனம்** - அகோ வாரும் புள்ளாய் மந்திரிமார்களே நம்முடைய தேசத்தில் பிராமண ஷத்திரியான் வைசியாள் சூத்திரன் இந்த நான்கு சாதிகளுக்கும் எரப்பன் பரப்பன் சோதி சொங்கமான் கத்தி சொல்லி கவி ஈஸ்பராளுக்கும் அவாளவாள் மனோரதம் ஈடேத்தி வைத்துக் குடியான பேரிடத்தில் நம்முடைய திரவியம் அவாளே சேராமலும் அவாளுடைய திரவியம் நம்மளே சேராமலும் உள்ளங்கை நெல்லிக்கனி போல சாஸ்த்திர விதமாக தேவாலயம் பிரமாலயங்களுக்கு யாதொரு யிடர்களுமில்லாமல் ராஜிய விசாரணை பண்ணிக்கொண்டு வாரும் பிள்ளாய் மந்திரியே

## மந்திரி விருத்தம் - ஆனந்தபைரவி

மணக்கவே கீர்த்தி பெத்த மனுநீதி மன்ன நார்க்கு
வணக்கமாய் ஏவல் கேட்கும் வாகுள்ள கட்டியமே கேளாய்

இணக்கமாய் பணங்க ளுக்கு ஈந்துமே எழுதும் ஓலைக்
கணக்கனார் தன்னே இப்போ கடுகவே அழைப் பாயே

## கணக்கப்புள்ளை வரும் விருத்தம் - தன்யாசி

அவனியிலே உரைத்த நீதி அணுவது தப்பி டாமல்
நிலமெனுங் குடிகள் வந்து நீதியென் றுரைத் திடாமல்
நவமணி முத்துப் போலே நல்லதோர் ஏடு தன்னில்
கவனமா யெழுதும் ஓசைக் கணக்கரும் தோனி னாரே

## தரு - தன்யாசி

கையிலெழுத்தாணி கொண்டு நல்ல காங்குரு மாலையுதானுங்கட்டி
மெய்யென ஓதும் யெங்கள் நல்ல மேவிய கணக்கருந் தோனினாரே
ஆலய மடங்களெல்லாஞ் சோதித்தணுவணு வாகவே
கணக்கெழுதும்
வாலைய வயதான நல்லவய்ய கணக்கருந் தோன்றினாரே
வெட்டி செயங்கொண்ட நல்ல வேந்தனார்கள் சபைதனிலே
கட்டுடன் கணக்கு கொண்டு நல்ல கணக்கு புள்ளையுந்
தோனினாரே
வேலைகள் பாத்துக் கொண்டு யேட்டை மிகவே கிழித்து
பணந்திருக்கும்
வாலைத்தன் யாசி பாடி நல்லவாகுடன் வந்து தோனினாரே

## கணக்க பிள்ளை விருத்தம் - ஆனந்தபைரவி

கதிரவன் குலத்தில் வாழும் கனத்ததோர் அரச னார்க்கு
மதியுடன் உரைத்த வார்த்தை மந்திரி மாரே - கேளீர்
சதிரினில் எந்த னைத்தான் தயவுடனே யழைத்த சேதி
விதியதா யெந்த னுக்கு விளம்புவீர் விளம்பு வீரே

**வசனம்** - அகோ வாருங்கள் மந்திரிமார்களே அடியேனை அழைப்பித்த காரியம் இன்னதென்று அருள் செய்ய வேணுமய்யா சுவாமி

**மந்திரி வசனம்** - அகோ வாருங்கள் கணக்க பிள்ளைமார்களே நம்முடைய தேசத்திலுள்ள மாவடை, மரவடை, நஞ்சை, புஞ்சை சொரணாதாய பத்துக்கட்டு பகுதிப் பணமுதலானதும் யாதொரு இடங்களில் இல்லாமல் செலுத்தி வருகிறார்களா சொல்லும் புள்ளாய் கணக்கப் பிள்ளை மாரே

## ராசா விருத்தம் - தோடி

தானென்னும் ஆண்மை யில்லா சார்ந்தகட் டியமே கேளாய்
தேனுடன் அலர்ந்த கொன்றை திங்களுங் கங்கை சூடி
மானுடன் மழுவும் யேந்தும் வண்மீகத் தியாகர் கோயில்
ஸ்தானிக மாரே யிப்போ சலிதியில் அழைப்பிப் பாயே

**வசனம்** - அகோ வாரும் புள்ளாய் கட்டியக்காரா நம்முடைய தியாகேசர் கோயில் ஸ்தானிக மாரே அதிசீக்கிரத்தில் அழைத்துவாரும் பிள்ளாய் கட்டியக்காரா

## ஸ்தானிகன் வருகிற விருத்தம் - தன்யாசி

பொன்னுடன் மணியு முத்தும் புகழ்ந்தருத்தி ராக்ஷ கொத்துஞ்
சென்னியில் தரித்துக் கொண்டு சிவசிவா வென்று கூறி
வன்னிபூ யெருக்குஞ் சூடும் வண்மீகத் தியாகர் கோயில்
மின்னிய பூணூ லிட்டு வேதஸ்தானிகர் வருகின் றாரே

## தரு - தன்யாசி

பூணூல் விளங்கிட நல்ல பின் குடுமி பூ துலங்கிடவே
மானியந் திருட்டவென்று ஸ்தானிகர் மறையவர் வந்து தோனினாரே

நெல்லிக்கனி பொருந்தி ருத்துராக்ஷம் நெரிய கொத்தும் தலையிலிட்டு

வல்லவேட்டி மேலே போட்டு ஸ்தானிகர் மறையவர் வந்து தோனினாரே

சம்பா பொங்கலுண்டு மோதகம் தேன்குழம்பும் கரநெடுத்து

வம்பர வார்த்தை பேசி ஸ்தானிகர், மறையவர் வந்து தோனினாரே

வெள்ளை கோமன கட்டி நல்லா வேடிக்கை கெவுடுதான் போட்டு

துள்ளி தன்யாசி பாடி ஸ்தானிகர் சோம்பாசி வந்து தோனினாரே

## ஸ்தானிகர் விருத்தம் - ஆனந்தபைரவி

அஸ்டமா திசைகள் தோறும் ஆராக்ஷி மணிகள் கட்டி

திட்டமா சேனையோரும் செலுத்திய அரசேயாளும்

மட்டில்லா புகழ் படைத்த மனுநீதி மன்னனாரே

யிஷ்டமா அழைத்த சேதி யின்னதென் றியும்புவீரே

**ரே உ வசனம்** - அகோ வாரும் ராச சேகர மார்கண்டனுக்குள்ள ஆயுசும் தேவேந்திரனுக்கு(ள்ள) பலமும் மன்மதனுக்குள்ள சிங்காரமும் குபேர சம்பத்துமுள்ள மகாராசனே வசீப வா மகாராசனே

## ராசா விருத்தம்

போத்தியருத் ராக்ஷந் தன்னே புனிதமாய் வேடம் பூண்டு

சாதிர விதங்க ளோதும் தானீக மாரே கேளீர்

யேத்தியே தியாக னார்க்கு யிசைந்தஓர் பூசை தானும்

மாத்தமில் லாம லிப்பேர் வருகுதே உரைசெய் வீரே

**வசனம்** - அகோ வாரும் தானிக மாரே நம்முடைய குலதெய்வமாயிருக்கா சாதர பிரகாரம் காலா காலந்தவறாமல் பூசை நைவேதியம் நடந்து வருகுதா சொல்லும் பிள்ளாய் தானீக மார்களே

## ஆனந்தபைரவி

வண்ணமயா வீர . . . . . . . . . . . . . . . . . . . . . .

சூதிர வசியனார் தங்களாஞ் செம்மையா அரசுநீதி

செலுத்திய ராசமன்னா ஒங்கள் தன் தயவினாலே

ஒசந்திடுந் தியாகனார்க்கு செம்மையாய் ஆறு

காலாந்திரமும் நடக்குதய்யா

**வசனம்** - அகோ கேளும் ராசசேகர தியாகராசருக்கு யாதொரு குறைவில்லாமல் ஆறுகாலமும் பூசை நடந்து வருகுது மகாராசனே

**ராசன் வசனம்** - அகோ வாரும் புள்ளாய் மந்திரிமார்களே ஆடையாபரணம் கொடுத்தனுப்பும் மந்திரிமார்களே

## ராசா விருத்தம் - கேதார கெவுளம்

கட்டியக் காரா கேளாய் கனசபை கொலுவில் வந்தோம்

திட்டமாய் நடனம் பார்க்கத் திருநகர கன்னி மாரே

நட்டுமுட் டுடனே அந்த நாடக சாலை தன்னை

தட்டுமுட் டுள்ள தெல்லாந் தரித்துநீ அழைப்பிப் பாயே

**வசனம்** - அகோ வாரும் பிள்ளாய் கட்டியகாரா நாம் நாட்டியம் பார்த்து அனேகநாளாய்விட்டது. அதிசீக்கிரத்தில் அழைப்பியும் பிள்ளாய் கட்டியகாரா

## நாடகசாலை விருத்தம் - கல்யாணி

வாடைகள் மிகவு பூசி மதனமா ரதியைப் போல

மேடிகள் மிகலு பேசி மெல்லியாள் சகிக ளோடு

சோடுஈ டாக வேதான் சோழரா சேந்திரன் வாசல்

நாடக சாலை பெண்கள் நலமுடன் வருகின் றாளே

## தரு - கல்யாணி

அதிரூப மாதர்கள் வந்தாள் நடனஞ் செய்ய
அதிரூப மதிவதன மிரத ஒளிருட சுரதபதி பெரும்
நிதியென திருநடனமுடனே - அதிரூப - சரிகை
சேலை இடை புனைந்து தகதகன்ன சார்ந்த
ஒட்டியாணமும் அணிந்து சலங்கை கொஞ்ச பரிமுலை
முலை களிருபுறமும் . . . . . . . . . . . . . . . . .
சேணு தோமென - அதிரூப -
இருகைமுகம்பி நயங்களிசைந்து வர இன்பமாய்
நின்று அன்னங்(ள)க ஒருவனத்தில் ஒரு
விடமொடு தவமுருகவே பெரி. . . . . . . .
. . . . . . . . சேணு தோமென - அதிரூப -
நெத்தியிலத்திலக பொட்டிட்டு தளதளென நீலவிழி
கண்கள் மையிட்டு - சிறுநகையா -
நத்திய மனுநீதி ராசனை நாடியே
பத்தியாக் கல்யாணி ராகத்தே பாடியே
அதிரூப மாதர்கள் வந்தாள்

## தரு - நீலாம்பரி

கும்மியடி பெண்கா கும்மியடி - கொண்டை குலுங்கவே
கும்மியடி நம்மளே ரக்ஷிக்கும் மனுநீதிச் சோழனே நாடிக்
கும்மியடியுங்கடி - தெண்டை சதங்கை கலீரெனவே
நல்ல தய்யலை முத்து சிவகாமி மண்டலம் போத்தும்
மனுநீதிச் சோழனே வாழ்த்திக் கும்மியடியுங்கடி
அல்லிமலர் போலே கைகளை நீட்டியே அன்பாய்க் கும்மியடியுங்கடி
அல்லியங் கோதை கமலாம்பாள் பாதம் அன்புடனே

நாளும் போத்திசெய்து வள்ளி திருமனுதேவி மணாளனை
வாழ்த்திக் கும்மியடியுங்கடி
ஆரூர்தன்னில்மிக வாழுந்தியாகராசரே அன்புடன்போத்தி செய்து
சீர் பெரும் நீலாம்பரி பாடி என்னாளும் சேர்ந்து கும்மியடியுங்கடி

## ராசா விருத்தம் - தன்யாசி

மந்திரி சொல்ல கேளாய் வன்மைசேர் பெண்க ளுக்கு
யிந்திர வரணச் சேவை யியலுடன் பணிக ளீந்து
அந்தமா அவர்கள் தன்னை அனுப்பியே விட்டுப் போட்டு
விந்தையாய் மல்யுத் தம்செய் துவீரரே அழைப்பிப் பாயே

**வசனம்** - அகோ வாரும் பிள்ளாய் மந்திரிமார்களே நாடகசாலை நாட்டியம் பார்த்து மகா சந்தோஷம் ஆச்சது அவர்களுக்கு வேண்டிய வஸ்துவை கொடுத்தனுப்பிவிட்டு நம்முடைய ஆசார வாசல் மல்லுக செட்டிகளை அனுப்பியு(ம்) பிள்ளாய் மந்திரிமார்களே

## செட்டி வரும் விருத்தம் - தன்யாசி

வாங்குடன் வருஞ்சு கட்டி வளதடி கையில் கொண்டு
தாங்குவேண் டயமுங் கட்டித் தயிரிய சாலி யெண்டும்
பாங்குடனே சோழன் முன்னே பலவித யுத்தஞ் செய்ய
தேங்குகள் போலே ரெண்டு செட்டிகள் தோனி னாரே

## தரு - கல்யாணி

செட்டிகள் வந்தநரே - மல்லுக
செட்டிகள் வந்து தோணி நாரே
வாணாத் தடிகொண்டு நல்ல - வள தடிச் சக்கரந்
தாளெடுத்து மல்லுயுத்தஞ் செய்ய நல்ல நல்ல
மல்லுகச் செட்டிகள் தோனினாரே

வீ(மீ)சைகள் படபடவென செட்டிக்கி மேல்
வீ(மீ)சைகள் துள்ளிவிழ - வீரங்கள்
பேசிக்கொண்டு நல்ல புதுமையாகவே யுத்தஞ்செய்ய
தன்யாசி பாடிக்கொண்டு சபையில் சரசமுடன் வந்து தோனினாரே

**வசனம்** - வாரும் புள்ளாய் கட்டியக்காரா நம்முடைய திருமனு தேவியே சேர்ந்து தோழியருடன் அழைத்து வாரும் புள்ளாய் கட்டியக்காரு

## கட்டிய விருத்தம் - ஆனந்தபைரவி

சானகித் துரோ பதைக்கித் தயிரியம் அதிக மான
மாநில மங்கை யர்க்கு வனிதையே எந்தன் தாயே
ஞான மாமறையோர்க் கெல்லாம் நாடியே கர்ப்பம் வாங்கும்
பானுவின்குலத்து வேந்தன் பக்கலில் வரச்சொன் னாரே

**வசனம்** - அகோ வாருங்கள் மாதாவே, மகா ராசா தங்களை அழைத்துக் கொண்டு (வரச்) சொன்னாரம்மா தாயே

## ஆரபி

கொண்ட வென்பினாராக னுதலின் மேன்மையொரு
சொற்பமானதில் தங்களும்
சோமன்ஏவ காமவிற்புருவச் சொல்லு மென்ன கயல்விழிகளே
கண்டறிந்தவர்கள் மேனி தேனுமென் கார்குழலுக்கு நிகராமோ காவில்
வாழும் மயிலிதோகை யாமெனவே
கண்டு அஞ்சுமென் குழலினால்
தெண்டனிட்டு வந்து நின்றுமே புகழுஞ்சேடியர்கள்
நடமாடவே - செஞ்சிலம்புகள் கொஞ்ச
வஞ்சியர்க்கு மழகா திருமனு தேவியு வந்தாள்

## தெரை தரு - ஆரபி

தேவிவந்தாள் திருமனுதேவி வந்தாள்
தேவிவந்தாளே தெருவை கரசனெனுங்
காவிமலர் போலவே கண்கள் துன்னவே (தேவி)
தங்கசதங்கைகள் காலிலசைந்திட தய்யலரின் சகிகூடவே
மங்கை தனக்கழகான மாதென வந்தாள் சபைதனை நாடியே
(தேவி)
ஒட்டியாணமும் ரெத்தின பதைக்கமும் ஒயர்ந்த மூக்குத்தி
ஓலையும்
அஷ்டதிசை புகழ்சோழ ராசேந்திரன் அன்பன் அருகினில் நாடியே
(தேவி)
இஷ்டகுல தெய்வதியாக ராசரே யின்பமுடன் மனதெண்ணியே
மட்டில்லாமலே ஆராபி றாகம் பாடியே
மன்னன் சோழேந்திரன் கொலுவை நாடியே
தேவிவந்தாள் திருமனு தேவி வந்தாள்

## கொச்சகம் - புன்னகவராளி

கங்குல் நிகர் கூந்தல் காதில்வருங் கங்குவளை பொங்கு மதனக்
கனையோ பொறிவண்டோ போர்க் கொடியோ
திங்களினம் பிறையோ சிலைநுதலும் செங்கைவளை பங்கயம்
போலே வதனராச பத்தினியு வந்தாளே

## தரு - தோடி

ராச பத்திநியு வந்தாள் நாரியர் சூழ (ராசபத்தினியு)
தேசம் புகழ் படைத்த மனுநீதி ராசன்

போசன் சோமேந்திரருட பூபால ராசன் தேவி
(ராசபத்தினியு)

குங்கும களபந்தி மிரந்து கமகமென்ன கூந்தலில் சுகந்த
மணிந்து

தங்க ஒட்டியாணம் பூட்டிச் சரிகைச் சேலையுகட்டி
சம்பிர மதாக நல்லதய்யலால் ஒயிலாக
(ராசபத்தினியு)

வஞ்சிக்கொடி போலிடையு சீவிவகுத்த வாய்த்தத் துடையுவடிவு
ரஞ்சிதமாகக் கிஞ்சி கொஞ்சி மொழியாள் தர
கஞ்சமலர் வதன செஞ்சிலம்புகள் கொஞ்ச (ராசபத்தினியு)
கந்தமலர்க் கரத்திலே ரெத்தினமிட்ட கைவளை கலகலெனவே
பாந்தமா மோதிரத்தில் பதித்த வச்சிரமிட்டு பாவையர் தோடிபாடி
பரிந்து

நாடி - ராசபத்தினியு வந்தாள்
அருள் செய்ய வேணுமன்னவா

## விருத்தம் - தோடி

திக்குள்ளோர் துதிக்கும் நீதி செங்கோல்கள் முறைமை யோடே
மிகவேஅ ரசையாளும்யென் வேந்தனே சரண மய்யா
தக்கதோர் மன்னர் சூழுஞ் சபைதனி லேயெந் தனைதா
யிக்ஷணம் அழைத்த சேதி யின்னதென் றருள்செய் வீரே

**வசனம்** - அகோ சரணஞ் சரணமய்யா சுவாமி அடியாளே அழைப்பி வைத்த காரியம் இன்னதென்றருள் செய்ய வேணுமய்யா சுவாமி

## தரு - சேனி

அருள் செய்ய வேணு மன்னவா யென்னை
அழைத்த சேதியருள - அருள் செய்ய வேணுமின்னு

அடியாளைச் சதிரினில் வர வழைத்ததும்
வஞ்சி நாநரியலும் - அருள் -
சித்த மகிழ்ந்தே யெனுக்குமே
விலை மதியா முத்து நவரெத்தினம்
வந்துதோ கொத்தவரே
மன்னவர்கள் கூடிய சபைதனிலே விஸ்தரித்தெனை யழைத்தர்
தனே நீரின்ன தெண்டு
(அருள்)

கரிகள் பரிகள் கிரயங் கொண்டீரோ
அடியாளதை காண வேணுமென்றெனை அழைத்தீரோ
தர்மநெறி நீதியுடன் தரணியே ஆளும் மன்னா
உருமையுடனெந்தனுக்கு உத்தசேதி சொல்ல வேணும்
(அருள்)

ஆசையுடன் நாமிருபேரும் பள்ளி அறையில்
நேசமுடன் கூடி இருக்கையில் ராசனே - அடியாளப் போது
மோச(ம)து செய்ததுண்டோ
பாசமா சேனிபாடி பத்தியா தியாகரை நாடி (அருள்)

## ராசா விருத்தம் - ஆனந்தபைரவி

ஆரிய முனிவர் போத்தும் அல்லியங் கோதை யர்க்கு
தேரிய பூசை செய்யு திருமனு தேவி யாளே
சூரிய நமது வம்மிசந் துலங்கிடப் பால நில்லா
காரிய விதங்க ளொன்றுங் கண்ணியே அறிகி லோமே

**வசனம்** - அகோ வாரும் பெண்ணே திருமனுதேவி நீ அனுதினமுங் கமலாம் பாளையு அல்லியல் கோதையு பூசை பண்ணியு யித்தனை காலமா புள்ளை யில்லாமலிருப்பது சென்மார்திர சுகுந்த விழ(ச)யமோ அல்லது நான் பண்ணிய

பாவமோ யாதொன்றுந் தெரியவல்லையடி பெண்ணே

## திருமனுதெவி பத்தியம் - ஆனந்தபைரவி

அரகரா சிவசிவா ஆதியே அந்தனே
அம்பிகைத் துணைவனே ஆரூர் வாழவே
குறைபடா செல்வமாய்த் தரணி களாளவும்
குத்தமில் லாமலே கோரி நாமே
பிரபல மறையவர் முனிவர் களனைவரும்
பிள்ளை யில்லா தவரென்று பேச
நரையாச்சுது காலமு(ம்) போச்சுது
நாடியே யெமதுட நாளுமாச்சு குறைபடா
காயிலைதனைக்கேகி நாலுந்துரைவர்கள னைவருந்தூஷிப்பார்கள்
இறைவர்யிப்படி யெழுதலாகாதுரை மிடத்தனை
யுடைய கருணை வாழ்வே

## தரு - காம்போதி

அய்யனே நானென்ன செய்வே
அருமையான பாலனில்ல அரண் செயலோ
யானறியேன் மன்னவரே துரையே

ராசா - தேன் மொழி மாதே நாமென்னடி செய்வோம் தென்னடி மடமானே அத்தியாகரதன் செயலோ மாதவர் மொழியோ தீவினை யோகாணேன்

தேவி - ஏதுகுறையாலே பாலனில்லாமலே எந்தனுக்கு யிப்படி யெழுதினாரோ மன்னவரே துரையே

ராசா - சத்தியமாக யெந்திசை தோறும் தாய்மார்கள் செய்த பேரும் தேவர் கேபம் தானோ கோபம் வேதனை சாதிசனப் பயன்தானோ

தேவி - முன்செய்த தவக்குறையோ முனிவர்கள் கரப்பினையே யெந் தலைவிதிப்படியோ மன்னரே துரையே

ராசா - மைந்தரில்லாம லிருந்தர சாண்டால் வருகுமோ கைலாசம் தியாகர் மலரடியேனுன் அனுதினந் துதித்தால் வருதுமே விசுவாசம்

தேவி - யெந்தலை விதிப்படியோ இறைவன் கரப்பினையோ தந்தைதாய் தவக்குறைவோ மன்னவரே துரையே

ராசா - யொன்னுடன் குறையே யென்னுடன் விதியோ யேதோ அறியேனே நாமிருவருங் கூடி திருவாரூர் மேவி இருந்து நாம் வருவோமே

தேவி - மாநில மாதர்களென்னை மாபாவியென்றுரைக்க மாமுனிவர் சாபமிதோ மன்னவரே துரையே

ராசா - புள்ளையில்லாம லிருந்தர சாண்டால் பொருந்துமோ கயிலாசம் அறன் பொருந்திய ஆரூர் போயி நாம் வருவோம் பெண்ணே நீ வாடாதே

தேவி - பாதியணியு் பரமரருளி நாலே பத்தியாய் காம்போதி பாடி மன்னவரே துரையே

## ராசாவிருத்தம் - காபி

மன்னவரே அமைச்ச மாரே யென்வாதுள்ள சுத்தத் தாரே
அன்னையுந் தந்தை யுசெய்த அடியநுள் பாவந் தானோ
வன்னமா மொழியா ளுக்கு வயதுமே அதிக மாச்சு
யின்னமும்பிள் ளையில் லாம லிருப்பது அறிகி லோமே

**வசனம்** - அகோ வாருங்கள் மந்திரி பிரதானிமார்களே பட்ட திரியாகிய திருமனுதேவிக்கு வயது அதிகமாகியு

இன்னமும் பிள்ளையில்லாமலிருக்குது. சென்மார்ந்திர சுகுந்த விழ(ச)யமோ அலலது யான் செய்த பாவமோ யாதென்றும் அறிகிலேன் பிள்ளாய் மந்திரிமார்களே

## மந்திரி விருத்தம் - காம்போதி

மன்னனும் மனது நொந்து மயங்கிடும் வேளை தன்னில்
முன்னுள்ளோர் பெரியோர் யெல்லாம் முயங்கிட வேண்டாங் கண்டீர்
அண்ணலார் தியாக ராச ரடிதுதி கள்பல செய்தால்
வன்னவன் னமாமொ ழியாளுக் குமைந்தனு மளிப்பா ரீசர்

**வசனம்** - அகோ வாருங்களய்யா ராசகேசர கமலாலயத்தில் தானம் செய்து அசைந்தாடுந் தியாகராசரே பூசை செய்தால் யாதொரு கொறைவு மில்லாமல் பாலகனுண்டாகுமய்யா சுவாமி

## ராசா காந்தாரத்தம் - ஆனந்தபைரவி

மங்கையே நமக்கு மைந்துக்காக
பொங்க மாயிருப் போரும் போய்க் கமலாலயம்
மங்களா தாநம் மகிழ்ச்சியா செய்து
திங்கள் தன்சடை யாரூரர் தியாகராசர் பொற்பாதத்தே
தெரிசிப்போம் வாரீர் தியா கேசரை தெரிசிப்போம் வாரீர்
வரிசைக் குயிலன்னமே வாராய் நம் பின்னே
கரியுரித்தோன் முன்னே கமலப்பாதந்தன்னே தரிசிப்போம்
பத்தியென்றெண்ணவோ பூவையர் தாமும்
சத்தியமாகதன்மனதொன்றாய்யெந்திசையோரும்யிறைஞ்சியே போத்தும்
புத்திடங் கொண்ட புனித தியாகேசரை போத்துவோம்
வாரும் தியாகேசரை போத்துவோம் வாரும்

காத்துதே முன் செய்த கருமமுமறியாமே
ஆத்து தனிலிருக்கும் அண்ணலாரூரானே போத்துவோம்

ராசா -

கூடியே யாவரும் குவலய மாண்டுமே
நாடியே னாமநூன் நமதுமே யில்லை
ஓடியே நமனும் உறுதியா வருகுமுன்
ஆடியே பாதம் ஆரூர் தனிலரனே
அடிபணிவோமே யோர் பதத்தை முடிபுனைவோமே
வடிவுடனுரைக்கும் முன் மானே மரகதமே
முடிதேடும் பாதமே முதல் பஞ்சாக்ஷரத்தே முன்
அடிபணிவோமே

தேவி -

மாமறை துதிக்கும் அல்லியங் கோதையை
நேமுகமாக நினைத்துமே மைந்தன் ஆண்
நமக்கில்லா அசத்தியந் தானோ காமனை யெரித்த
கயிலாச நாதரை கருதுவோம் வாரீர்
கருணாகரெ க்ஷக சந்திரசேகரனே அரகரா
ஆனந்த பைரவி ராகத்தே கருதுஓம் வாரும்

## விருத்தம் - காபி ராகம்

அல்லியங் கோதையாக அன்புடன் பாகம் வைத்த
மெல்லிய கமலம் பாளை மேன்மையா யிடத்தில்வைத்த
புள்ளையில்லாத பாவியென்றுமே யெனை சொல்லாமல்
வள்ளலே யெந்தனுக்கு மைந்தனே யீந்திடாயே

## தரு - காபி

வள்ளலே நானென்ன செய்வேன் வயதெனக்கறு பதாகி
பிள்ளையில்லாப் பாவியானேன்
அல்லும் பகலுன்னே நம்பிஅரசாண்டிருந்தோம் நாங்கள்
தொல்லுலகி லேசலாச்சுதே

## தரு - காபி

தொட்டு தாலி பூட்டி ராசனது ஐயங்கட்டி ஆண்டதற்கு
பட்டங்கட்ட பிள்ளை இல்லையே ஈலகால விழ(ஷ)த்தே
யுண்ட ஆரூர் நாதா யெந்தனுக்கு பாலகன் கொடுத்து
ரெக்ஷிப்பாய் காலனை காலாலுதைத்த கமலாம் பாளை
யிடத்தில் வைத்த காப்பிபாடி உம்மை போத்தினேன்

## துரத்தி வருகுர விருத்தம் - மோகனம்

சிலை நுதலில் கஸ்தூரி திலகமிட்டு நறுங்குழலில் செச்சை சூடி
சூலமதற் காண்மை யெழுதி மாத்திரைக் கோல்வாங்கி
நெடுங்கூடை தாங்கி
முலை முதத்திற் குண்டுமணி வடம்பூண்டு தியாகேசர் முதல்வர்
நாட்டில்
மலைதநிர் பொன்வஞ்சி குமர வஞ்சிய பரஞ்சி கொஞ்சி
வருகிண்டாளே

## தரு - சுந்தரமாம்

சுதந்த கரவஞ் சிவநாள் செந்தாமரை முகமும்
திலகமகள் தளென கந்தங் கஸ்தூரி பூசிகன்னி ஒயிலா வீசி
(சுந்தரமாம்)
செவியில் ஓலை சிமிக்கி சிங்கார மாயலுக்கி

யவநியோரை மயக்கி யின்பமாய் கூறி யலுக்கில்
சுந்தரச் செரிகை சேலையிடையாள்
சா்ந்த அன்னநடையாள்மருவுமலருடையாள்வந்தாள்பின்னல்சடையாள
(சுந்தரமாம்)
தெய்வ லோகத்தில் நின்று செய்யுங் கரிக்கோல் கொண்டு
பய்ய மோகனங்கண்டு பாங்காய் சபையிலின்று

## தரு - சுந்தரமாம்

வாசலிது வாசலிது மகாராசன் வாசலிது
நேசமு சுகுந்த மன்னன் நிதந்துதிக்கும் வாசலிது
அம்மே மறைநாலுங் கோபுரமாய் வான் கிழிக்கும்
நிறைவாறு சாஸ்திரங்கள் நிறைந்திருக்கும் வாசலிது
அமமே சைவ நெறியாக மங்கள் தழைத்தோங்கும் வாசலிது
மெய்யுரை செய்முவர் தமிழ் விளங்கி நிற்கும் வாசலிது
அம்மே வார் பெருகுங் குமிழ் முலையாள் வளர் நடஞ்செய்
வாசலிது
சீர்பெருகும் மனுநீதி செழிக்க தோடிபாடுமிது அம்சமே

## தரு

மேல்மலை குரவருக்கு தோழ மலையம்மே
வீரமலை யெங்களுக்கு பேரன் மலையம்மே
நாகமலையது நடுத்தோகை மலையம்மே
நாத்திமலை நீலமலை பேக்ஷி மலையம்மே
தங்கமா மேருமலை வெள்ளி மலையிரண்டும்
சாம்ப மகாதேவருக்கு சாதனமாய் கொடுத்தோம்
சிந்தை பெருங் கயிலை மலைசுவாமி மலையிரண்டுஞ்
சிக்கேந்திரன் மேல் தோடி பாடி சீக்கிரமாய் கொடுத்தோம்

# சாதி வளப்பம்

## தரு

யெங்கள் சாதிக் குரச்சாதி ஆஅய்யே
சாதிக் கெல்லாம் உயர்ந்த சாதி ஆஅய்யோ
கங்கை பாலர் வேளூர் செங்கை வேலவர் நாட்டில் காலை
யிங்கிந்த விலை
மங்கள லீலை யெங்கள் சூழ் வேலவர் நாட்டினில்
யெங்கள் நாட்டுக் குரவரைப் போல் காட்டில்
கழுகுதின்ன மாட்டோம் ஆஅய்யோ
வண்டு நக்கிப் பாத்த பூவை யெச்ச லென்று
கூந்தலில் சூட்டோம் ஓஓமய்யே
பூட்டகமா யெங்கள் குலவித்தை யொருவருக்குங் காட்டோம்
வெள்ளி பொன்னை யொரு பொருளா யெண்ணி
கொண்டுடம்பினில் சூட்டோமய்யே
கையை காட்ட சொல்லி ரேகை பார்த்து
தேவர் கருத்தில் நினைத்தபடி யுரைத்து
சிங்கியடித்து கத்துவோம் ஊரை சுத்துவோம்
தோமனா குத்துவோம் பழங்கஞ்சிக்கு கத்துவோம்
யெங்கள் குரத்தி புளிக்குடிக் குரவன்
காயந் தின்பதுண்டு ஆஅய்யே
மச்சான் கொழுந்தனுடன் படுப்போம் புருஷனைப்
போலெண்ணிக் கொண்டு ஆஅய்யே
மற்றொரு சாதிக்கு பெண் கொடோமென்பதை
கண்டு யெங்கள் வளப்பு கெண்ணே சுப்ரமண்யர் திருடிக்
கொண்டார்

பண்டு ஒவ்வொரு குரவர்க்கு யேழெட்டுக் குறத்தியா
ஒனக்காகச் செனக்காச் சென்டு வழக்குகள் மேக்க சொல்லி
ஓடுவோம் கிட்டே நாடுவோம் படலை மூடுவோம்
காம பூசைகள் போடுவோம் யெங்கள்
மாரு முலையை யெட்டி பிடித்த போதிலும் குத்தமில்லை
ஆஅய்யே
சங்குமணியை மாமன் மச்சான் தீண்டும் போது வருங்கல்லை
ஆஅய்யே
காருலாவும் பரநெறி கார்ப்போந்தினை கொல்லை ஆஅய்யே
கையில் கட்டிக் கொள்வோம் புலிப்பல்லை ஆஅய்யே
ஆனைக்கரி யிருக்க பூனைக்கரிக் கிச்சிப்போம் அன்பாய்
சாவேரி பாடி தின்போமென்றெண்ணி நாடி
சொல்லுவோஞ் சுட்டு மெல்லுவோம் யெங்குஞ்
செல்லுவோம் பஞ்சபாட்டுகள் சொல்லுவோம் யெங்கள்

## அகவல் - ஆரபி

அள்ளியே சாணமிட்ட கலமா மெழுகி
பிள்ளையார் தனை வைத்து பூவையு சாத்தி
கிழங்குடன் வாழபழங்களும் படைத்து
முழங்கவே தேங்காய் முன்னுண்டுடைத்து
தூபமெடுத்து தோத்திரம் பண்ணி
தீபமெடுத்து சிந்தையில் நினைந்து வைத்து
பண்புடன் சுத்தியே கும்பிடு
ஒன்குல தெய்வத்தே உகந்துமே
போத்துயென் குலதெய்வத்தே யியம்புவே னிப்போ
அறிந்து கொண்டேன்

கங்காள பாணி காளி தேவி அங்காளம்மா அய்யனாரய்யா
கொல்லப்பூரம்மா குரை கூடை நாச்சி
சொல்லாக் குறி சொல்ல துணையாகவே வா
யென்குறி பலிக்க இன்பமதாக வாக்கிலிருந்து வழியுரைப்பீரே

## தரு

அறிந்து கொண்டேன் குறி தெரிந்து கொண்டேன்
அறிந்து கொண்டேன்ம்மே
காத்தவராயன் வந்து கண்ணே காட்டுது
காட்டேரி வந்து மோட்டேரிக் குதிக்குது
வீரபத்திரசாமி வந்து வீச்சரிவா கேழ்(க்)குது
(அறிந்து கொண்டேன்)

உதிர கருப்பு வந்து ஒண்டி ஒண்டி பாக்குது
ஓ சடை முனிவந்து ஆடுகோழி கேழ்(க்)குது
உலுக்குது கிட்டே வந்து அலுக்குது
வாய்க்கா நொண்டி அய்யன்பிடாரியெல்லாம்ஆபி பாடிக்கொண்டு
அறிந்து கொண்டேன் குறி தெரிந்து கொண்டேன்
நான் அறிந்து கொண்டேன்

## கங்கணங்கடய

கங்கணங்கடய மிட்ட கையைக் காட்டாயம்மே
மங்கையரே தங்கரேகை கையை காட்டாய் முத்திரை
மோதிரமிட்ட கையைக் காட்டாய் முன்கையில்
முதாரியிட்ட கையே காட்டாய்
அஸ்தகடயம் புனைந்த கையே காட்டாயம்மே
அலங்கார நெளியிட்ட கையே காட்டாய்
சித்திர சூடகமிட்ட கையை காட்டாயம்மே

செழிக்க பந்து வசளி பாடி நென்கையேக் காட்டாய்

## கல்துறை

ஆனேருஞ் செல்வன் அல்லியங்கோதை யணிவரை வாழ்த்தேனே
திருமனுதேவியே நான் வந்த வேளை நன்றே
தானே யிசைந்த தியாகேசர் தாமரைப் பூங்கானே
புதுமையாய்க் காய் மனக்குறி காட்டுதற்கே

## தரு - முகாரி

ஆளூருடன் வருமை பசியாத்தும் ஒந்தன் கையே
அதையென்னிடம் காட்டிரு வாயறிந்து சொல்வேன் மெய்யே
காரானை முகத்தேனே கணபதியே அய்யா
சீரான குறியுரைக்க சித்தம் வைப்பாய் மெய்யா
பாலகனுமில்லையெண்டு பகர்ந்து சொன்ன மாதே
கோலவிழி மாதரசே குழந்தையுண்டிப போதே பேசுவார்களென்று
சொஸியேங்காதடி பெண்ணே -
சோசியத்தால் ரேகை - மோக்ஷ ரேகை
சித்தி ரேகை யிருக்க - சூக்ஷமுள்ள
சு(பு)தன் வேகையுந் தோணுதடி பெருக்க
கவலையடையாதே ஒந்தன் கணவருடன் கூடி
நத்தியே முகாரி பாடி நலமாய் பிள்ளை பெறுவாய்

## தவமது செயி

## விருத்தம் - முகாரி

யித்தனை காலந் தன்னில் யியலுடன் தேச மாண்டு
புத்திர னில்லாத துக்கம் பொருக்கலுஞ் சகிக்க தில்லை

சித்திர மொழிகள் பேசும் திருமனு தேவி யாளே
அத்தநாரி தம்மை நோக்கி அருந்தவம் புரிவோம் வாராய்

## தரு - முகாரி

தவமது செய்வோம் வாராய் பெண்ணே அடியென் கண்ணே
தவமது கவனம் வீட்டில் வையாதே கடிகியே நாமிப்
போதே புவனம் யெங்கும் விளங்கும் புனிததியாகரே தேட

## தவமது

வாசிவலமாகுதே பெண்ணே அடியென் கண்ணே
மைந்தன் தருவார் தியாகர் தன்னே தேசிகன்
பாதந்தேடி தெளிவாய் மனதுகூடி

(தவமது)

மைந்தனில்லாத பேர்க்கு தொல்லை அடியேன் கண்ணே
வாழ்ந்துமிருந்தும் பலனில்லே யெண்ணியே
முகாரி பாடி யீசர் பாதத்தே தேடி

(தவமது செய்ஓம்)

## விருத்தம் - பிலகிரி

யிருவரு மனது கூர்ந்து யின்பமாய் ஆரூர் தன்னில்
பெருவரைக் காம லைமூழ் கிபிள்ளைதன் கவலை தீர
திருவளர் தியாகர் பிள்ளை யில்லாத துதிகள் செய்து
மருமலர் வாசத் தோடே வரமது கேள்க லுத்தார்

**வசனம்** - யிந்த பிரகாரம் மனுநீதி சோழ மகாராசா வானவர் தன் பெஞ்சாதியும் தானுமாய் திருவாரூருக்குப் போய் கமலாயத்திலே ஸ்நானம் பண்ணி தியாகராசரே வரங்கேக்குர விதம் யெப்படி யென்றால்

## தரு - பிலகிரி

பிள்ளையில்லாத பெரும் பாவியாகி னேன் தியாகனாரே
உள்ளமுருகி உலை மெழுகாகிநேன் தியாகநாரே
தேசத்திலுள்ள திரள் வேந்தரெல்லோருந் தியாகநாரே
மனங்கூசாம லென்னைபுறை சொல்லுவார்களே தியாகனாரே
சரியொத்த பேர்கள் சரியில்லை யென்றென்னை தியாகநாரே
மெத்த பரியாசஞ் செய்து பலிக்கலு மாகிநார் தியாகநாரே
உள்ளூர் நகைக்க உடம்பெடுத்தே நய்யோ தியாகநாரே
மனந்தேறாமல் நின்றுத் தியங்கித் தவிக்குறேன் தியாகனாரே
காமனே கண்ணால் கடிந்து யெரிந்தீரே தியாகநாரே
ஒம்மே நேர்முக நினைக்கலு மாகிநேன் தியாகநாரே
பாவியென்ற நாமம் படைக்கலு மாகினேன் தியாகநாரே
உம்மை நாவில் துதித்தோர்க்கு நரகமுமில்லை காண் தியாகநாரே
ஆறாத் துன்பத்தி லழிந்திக் கிடவாமல் தியாகநாரே
மனந் தேறாமல் நின்று தயங்கித் தவிக்குறேன் தியாகநாரே
பஞ்சாக்ஷரந்தன்னே பத்தியா பூசித்தேன் தியாகநாரே
சுதன் கொஞ்சி விளையாடக்குரலோசை காண்கிலேன் தியாகநாரே
பாடித்துதித்து பரலோகஞ் சேரலு தியாகநாரே
ஒம்மை பாடி பலர் கிரிபாடிப் பணியுரேன் தியாகநாரே

## சபை விருத்தம் - அட்டணா

கூவிட குழந்தை யில்லா குத்தத்தி னாலே மன்னன்
ஆவிவிட் டாக்கை சேர்ந்து அரகராசி வனேதி யாகா
பாவிநான் யென்னா செய்வேன் பராபரப் பொருளே யென்று
தேவிதன் மடிமேல் நித்திரை செய்கின்றான் செய்கின் றானே

**வசனம்** - யிந்தப் பிரகாரமாக மனுநீதிச் சோழ மகாராசாவானர் புள்ளையில்லாத விசனத்தினாலே துக்க சமுத்திரத்திலழுந்தி தன்தேவி மடி மீதினில் நித்திரை செய்கிற விதம் யெப்படி யென்றால்

## தரு - அட்டணா

நித்திரை செய்கின்றாரே மன்னன் தேவியுடனே
நித்திரை செய்கின்றாரே மன்னன் நித்திரை செய்கின்றாரே
புத்திர சோபத்தினாலே நித்தமு மனுதினம்
பத்தியுடனே தியாகர் கரத்தனே ஆதியெண்டு
மெத்த உருகி கொண்டு நித்திரை

அரனிருதாள் போற்றி செய்பவர் செகந்தனிலே
ஆரிலோர் கடமைப்பட்டவர் குருமொழி
தவறாத மன்னர் புவிதனிலே குடிகளை யெண்ணாளுங்
கார்ப்பவர் கொறை வொன்றில்லா சென்மத்தில்
நரையொன்று வந்து தெண்டு அரகராவென்று
சொல்லித் திருமனு தேவியுடன் நித்திரை

கூவிட குழந்தை யில்லாத குத்தத்தினாலே
கொத்தவன் மனமுறிய ஆவிவிட்டவர்
கலங்கியே அனுதின மனதி லெண்ணியே
பாரினிலே வரையூ கோவித்து கொள்ளாமல்
தாலி மஞ்சத்தின் பேரில் தேவியுடனே கூடி நித்திரை
கங்கை தும்பை கொன்றை சூடியே
மான்மரு சூலங் கபாலமுங் கையிலேந்தியே

சங்கீத சோழனே நாடியே மனதிலுள்ள
சஞ்சலந் தீர்ப்போமென்றாடியே
அங்கரன் தனைப பெற்ற ஆரூரான் கிருபையால்
அட்டணு பாடியின்றி பட்டத்துக்கு பிள்ளை வேண்டி நித்திரை

## விருத்தம் - தோடி

ராசனும் சேனை யோட நல்மொழி தேவி கூட
போசனஞ் செய்து கொண்டு பூவளை மீதி லேதான்
வாசமாய் துயிலும் போது வன்மீக தியாக நாரும்
யீசனும் பாலன் தன்னே யிக்ஷணம் யீந்திட் டாரே

**வசனம்** · அகோ தெப்படி யென்றால் மனுநீதி சோழ மகாராசாவானவர் நித்திரை செய்கிற போது திருவாரூரிலே சொயம் பிரகாசமாய் விளங்கா நின்ற அசைந்தாடுந் தியாகராசருங் கமலாம்பாளுஞ் சந்தோசத்துடனே நித்திரை சோதித்து பாலகனளித்தார். அத்தருணத்தில் திருமனுதேவி தன் பர்தாவை யெழுப்புகிற விதம் யெப்படி யென்றால்

## விருத்தம் - ஆனந்தபைரவி

யிப்படி யிருபே ருந்தான் யினையிலா துக்கத் தோடே
அப்பணி சடையான் தன்னே அனுதினம் மனதில் எண்ணி
சப்பிர கூடத்தின் பேரில் சயநித்து இருக்கும் போது
சொர்ப்பணங் கண்டார் மன்னன் தோகையூ யெழுப்ப லுற்றாள்

## திருமனுதேவி தரு - ஆனந்தபைரவி

யெழுந்திரு மன்னவா நித்திரை விட்டு
யெழுந்திரு மன்னவா குளுந்த தென்றலும்
வீசுதே யென்னுட கொத்தவரே யென்னு
நித்திரை செயிகுறீர் வளர்ந்த

புத்திடம் கொண்ட ஆரூரானே வாசசேநேசனே
பூசை செய்யும்படி யெழுந்தருளும்
பாலகனில்லாதுயரத்தா லென்னோட
பத்தாவே நித்திரை சத்துந் தெளியாதோ
ஆலமுண்ட அரன் தன்னை வணங்கவே அன்புடனே
தவந்தென்புடனே செயிவோம் - யெழுந்திரும்
மல்லிகை முல்லை யிருவாக்ஷி செண்பகம் மந்தாரை கொன்னை
மரிக்கொழுந்துமுடன்
தில்லை நடம்புரி ஆரூர் தியாகரே சித்தம் மகிழவே கரத்தனே
ஆரிலொன்று வாரம் பாரிலுள்ளோர்கள்
அபயமென காமலே ராக்ஷியங் கட்டிடும்
சூரிய வமிசத்துக் கோரிடுக்கமும் சொல்லாமலே
ஆனந்தபைரவி பாடினேன் - யெழுந்திரு மன்னவா
நித்திரை விட்டு யெழுந்திரு மன்னவா

## விருத்தம் - புன்னகவராளி

சிவசிவா யென்று மன்னன் திடுக்கென யெழுந் திருந்து
பாவமெல் லாம்வி லக்கும் வேதபி ராமணாள் தன்னே
பார்த்துசு கமதாய் ராசன் தானும்சொப் பணம்கண் டதெல்லாம்
தவமுனி அரசர்க் குதனை சாற்றியே மனது மகிழ்ந்தான்

## தரு - புன்னகவராளி

கண்டேன் கினாவதுவே யெந்தன் கருத்தில்மகிழ்ந்து களிகூர்ந்தேன்
பண்டும் பெரியோரே யெந்தன் பாவந்துலைந்து பறந்தது
காண் செஞ்சடையு வெண் மதியு திருநீருந்
திருமணித் தாவடமும் கொஞ்சுஞ் சடை பிறள
ஒத்த கூரிய சூலமுங் கையில் கொண்டு

அஞ்சுமுகமாகி அருளாந்தமாக நடனஞ் செய்து
சஞ்சலந் தீர்ப்போமென்று தயிரியஞ சொல்லி யதட்டிநர் காண்
யென்னா குறைகளென்று அவர் யின்பமுடன்
யென்னை கேட்டார் காண் சொன்னேன் ஒரு வசனம்
யென் துன்பங்கள் தீர சுதன் கேட்டேன்
தந்தே னென்றே யுரைத்தார் ஆரூர் தியாகரோ
யென்னமோ யானறியேன் யிந்தக் கினாவதுவே
புன்னகவராளி யியம்புவீரே

## விருத்தம் - கேதாரகெவுளம்

மனுவெனு மிருந்த சோழ மன்னவா சொல்லக் கேளாய்
தனியநாய் நின்ற சோதி தியாகநார் தானு மிப்போ
புனிதமா விளங்கும் நல்ல புத்திர னளித்தா ரய்யா
யினியதா கிலேசம் வேண்டாம் யெழுந்திடீர் ராச கோவே

**வசனம்** - அகோ வாரும் ராசசேகரா திருவாரூரிலே யிருக்கும் தியாக ராசர் வந்து புத்திரநளித்தாராக்கும் விசனப் படவேண்டாமய்யா சுவாமி

## விருத்தம் - தோடி

நீதியா பெரியோ ரெல்லாம் நிறைந்துமே உரைக்கும் போது
வாதினை தீந்து ராசன் மனமது மகிழ்ச்சி யாக
மாதுதன் நிகரா மனுவ ரைதேவி யாளுங் காதலும்
மதிமதன் போல கலந்து மேயிருந் திட்ட வாரே

**வசனம்** - இருந்த பிரகாரம் மனுநீதி சோழ மகாராசாவானவர் பெரியவர்கள் சொன்ன வார்தே கேட்டு சந்தோழ(ஷ)த்தை அடைந்து ரதியும் மன்மதனும் போல சுகித்திருந்தார்கள்.

## மேற்படி - புன்னகவராளி

அரவமும் தரித்த ஈசர் அல்லியங் கோதை தன்னே
பரவியே பூசை செய்து பயந்து பலித்தாப் போலே
நரைதிரை யான் போது நங்கையு கற்பமாகி
வரும் விழி வெளுத்து மெத்தமாது தன்வரு கின்றாளே

## தரு - புன்னகவராளி

வந்தாளே கெற்பத்துடனே தீரும் மனுநீதி
வந்தாளே சேர்ந்து சரசஞ் செய்து சிகப்பு வெள்ளையுமாகி
பாய்ந்து கருவிலூறி பாலிடை போலிடைபோல் திரண்டு
வந்தாளே திங்கள் மூன்றுஞ் சென்றதின் பின்பு
கெற்பந்தரித்து திரண்டு ஆமை உருவாகவே
மங்கைக்கை முந்தியே நித்திரை சோம்பல்
வருகுதெனவே கூறியே யெங்கும் பழையன்னமும்
புளிப்புந்துவப்புமாக இங்கிதமாக நல்ல இனிப்பு
மேலாசை கொண்டு வந்தாளே ஆறிலொரு
திங்களுஞ் சென்று கெற்பந்தரித்து அரிவையொரு
அங்கமுகமாகி பாரித்து உடல் கனக்கவே
அங்கமும் வேர்க்க பக்கஇடை பெருக்கவே
கூர்முகம் வெளுத்து கோதை முலை கறுத்து
நாரி மயிர் கறுத்து நல்லவிழி வெளுத்து வந்தாளே
நல்ல வசனங்கள் சொல்லும் கண்டால் நடக்க இருக்க அஞ்சியே
தொல்லையிது யென்றெண்ணியே மனந்தளந்தும் பலகிதமாகியே
அல்லும் பகலும் தியாகராசர் தனையே நினைந்து
நல்லா புன்னகவராளி நாடியே பாடிக் கொண்டு வந்தாளே
கெற்பத்துடன்

## விருத்தம் - ஆரபி

கூரியே மொழிகள் கேக்குங் கோதையே சொல்ல கேளாய்
பாரியே யேமன் தானும் பக்கத்தில் வந்தால் போலே
யேருது விலாஅக் குள்தோ றும்எலும்பும் கொடை யுதம்மா
தேருநா லதேரு தில்ல சிந்தையுங் கலங்கு தம்மா

## தரு - ஆரபி

அய்யய்யோ நானென்ன செய்வேனடியம்மா
ஆறுநாளா எனக் காறாதில்லை சகியே
தய்யலால் தான் கூடயிருந்து யென்னா பாங்கி
சகியாளுங் கூடயிருந்தும் என்றா
மெய் உள்ளமெல்லாம் மெலிந்து வேதனைகள் அறாதிப்போ
அய்யய்யோ தெள்ளுதே என்திரேக மெல்லாம்
சிந்தை கலங்குதய்யா கள்ளமாயிந்த தொந்தி கனவலியாகுதிப்போ
அய்யய்யோ தெள்ளுதே யென்திரேக மெல்லாஞ்
சிந்தை கலங்குதய்யோ சகிக்கப்படாது மானே
தய்யலரே என்ன செய்வேன் மயக்கமாய்
வருகிதே இந்த வாதினை அநியேனே
அய்யய்யோ ஆருமத்த பாவி யானேனடி சகியே
ஆரபிராகம் பாட ஆருரானே துணை அய்யய்யோ

## விருத்தம் - முகாரி

அன்னையோ தோழி மாரே அரிவையே சொல்ல கேளாய்
கன்னியென் றெடுத்த சென்மம் காவினில் பிறக்க வொண்ணாது
மன்னிய சந்தா னமும்மே னிவயறுமே உளையு தம்மா
யென்னதான் செய்வே னய்யா தியாகராச சாமி யய்யா

## தரு - முகாரி

அரசராய் இருந்து அவதிப்பட யென்னுதானா
காதபேர்க்கு அனியாயஞ் செய்தேனே இந்த துயர்
எனக்கு ஆகாது அய்யா வையகம் தனில்
வஞ்சகம் பேசியே அய்யமிட்டு உண்ணாமல்
யானிருந்தேனோ கைகளில் மழுமானேந்தும்
ஈசனே கமலநாரே எனக்கு அருள் செய்வீரே
அங்கம் உருகுது திங்கள் நிறையுது
யாரிட்டசாபமோ நேரிட்டுதோ வேளை
அறியதாய் நின்ற ஆரூர்தியாகரே முகாரி
பாடினேன் முன் வந்து காப்பாய் அரகரா

## இந்த விருத்தம் - மோகனம்

உரைத்தோர் வசனம் கேக்கும் உகந்தகட் டியமே கேளாய்
திரத்தன் சோலெ ஆரூர் தியாகராசர் கிருபை யாலே
கருத்தன விழிகள் காரி மைபாலர் தேவ தையே
மருத்துவம் பார்க்கு நல்ல மாதரை அழைப்பிப் பாயே

**வசனம்** - அகோ வாரும் பிள்ளாய் கட்டியக்காரா மருத்துவக் கிழவியே அதிசீக்கிரத்தில் அழைப்பாயு கட்டியக்காரா

## விருத்தம் - ஆனந்தபைரவி

அடவுடன் உடையு கட்டி ஆனதோர் முதுகுங் கூனி
திடமுடன் கோலை ஊனி சிரித்துநல் பல்லைக் காட்டி
வடவரை தான மேத னிபருவம் பார்க்க வேதான்
கடைவிழி பூழை சோரக் காரிழை வருகின் றாளே

## தரு - ஆனந்தபைரவி

வந்தாளே மருத்துவச்சி ராசனை நாடி வந்தாளே
தொந்தோமென்றாடிக கொண்டு தோகையர் யெங்கே என்று
விந்தை மாத்திரை கொண்டு வேடிக்கை நடை நடந்து வந்தாளே
நீண்ட முலைகளாடவே இடையில் சேலை
பாண்டலெனவே வீச ஆண்டனை வந்தானய்ய
உய்யா மிகுந்த பிள்ளையுமய்யா வந்தாளே
கமுதையு தடுங்காடியே குஞ்சிருப்பாடி
வமுவாத வார்த்தே ஓட்டியே வளுத்த முதுகுங்கூனி
வெளுத்த தலையு நாணி அமுத்தி கோலை பிடித்தாடியே
ஆனந்த பைரவியே பாடி வந்தாளே மருத்துவச்சி
பத்தியு புன்னகவராளி வஞ்சியே மிஞ்சுது
மார்தனிலேறு வாதைகளாகிய வலிகள் மெத்த
நெஞ்சிலேறுது நிகரில்லை யென்னுடல் நீங்கிடாது
துன்பமோ தீங்குதானோ அஞ்சுதே யென்னுடல்
மெய்மறந்து ஏங்கியே ஆற்றாதும்மே
பெண்ணென் சென்மமாகா தஞ்சமா அருகில்
வாழ்கின்ற அன்னையே சகியாளே யாநிதே
சகிக்க மாட்டேன் கொஞ்சமோ என்னடி
பாலற் தேவதை தஞ்சமா அருகினில் ஒருவர்க்கு ஆனேன்
நஞ்சனி கண்டநார் கிருபை தானோ
அஞ்சலென்றேனே அருள் ஆரூர் நாதா

## தரு - புன்னகவராளி

வருத்த மாகுதே என்னு செய்வேன் அடி அம்மாமாரே
வருத்தமாகுதே மெத்த வயருளவாகியே

இருக்கச் சகித்திலையே என்செய்வேன்
பாங்கிடாரே அங்கம் உளையுது அடிவயிற்றில்
வலிக்குது யெங்கும் ஒரே வலியாய் இருக்குதே
என்னுசெய்வேன் வருத்த இடையு வளையுது
இருவிலா வலிக்குது குடையுது காலுகை
கோதையே யென்ன செய்வேன் வருத்த
மலடாயிருந்தா லிந்த வாதினை கிடையாது
பலப்பல விதமாக பதைத்தே என்ன செய்வேன் வருத்த
நங்கைமாரே இங்கே நருக்கு வலி
ஆறாதே எங்கும் புன்னுகவராளிய பாப்பாடினேன் நாடி
வருத்த மாறாதே என்னு செய்வேன்

## விருத்தம் - நாதநாமகிரிகை

கள்ளமொன் றிலாத சோழன் காரிழை வருத்த மாகி
உள்ளதோர் மாதம் சென்று உருகியே உழலும் போது
எள்ளது என்னை போலே எங்குமே நிறைந்த ஆரூர்
வள்ளல்தன் கிருபை யாலே மைந்தனும் பிறந்திட் டானே

**வசனம்** - அகோ தெப்படி யென்றுல மணி நகரத்தை ஆளப் பட்ட மனுநீதி சோழ மகாராசாவின் தேவி வயித்திலே தியாகராசருடைய கிருபா கடாட்சத்தினாலே கோடி சூரியப் பிரகாசம் போல் குழந்தை பிறந்தது காண்க

## தரு - நாத நாமகிரிகை

பாலர் பிறந்தாரே ராச பத்தினி யாழ்க்கு
ஆலமுண்ட கண்ட திருஆருறு அருளினாரே
பாலனும் பிறக்கவேதான் பாவையர் விரகந்தேடி
பாலர் ஞாலமும் விளங்கவே முகூர்த்தங்கள் தேடி

சீலமனுநீதி ராசன் செங்கோல் தழைக்கவே தான்
பாலர் பாரிலுள்ள வேதசாஸ்திரம் பாங்குடன் படிக்க
மெள்ள தாவி அரசாள மெத்த கம்பீரமாக நல்ல
பாலர் வேதமுள்ள மனுநீதி வேந்தனார்
குலக் கொடி நாதநாமகிரிகை பாடி
நல்ல முகூர்த்தங்கள் தேடி
பாலர் பிறந்தாரே ராசபத்தினியாள்க்கு

## விருத்தம் - மத்திமாபதி

சோசியர் வருக வென்று சோழநார் உரைத்த போது
வாசமாய் வேத சாஸ்திரம் வகையுடன் எடுத்து கட்டி
பாசமாய் கையை வீசி பஞ்சாங்கம் சொல்ல வேதான்
வீசியே வேக மாக வேதரியர் தோணி னாரே

## தரு - மத்திமாபதி

சோசியர் வந்தாரே சபைதனில் சோசியர் வந்தாரே
தேசம்புகழ் மனுநீதி சித்தம்மகிழ்ந்துமே மெத்த அழைத்தாரென்று
(சோசியர் வந்தாரே)
பாலர் பிறந்த நவக்கிரகம் தன்னே பாத்து உரைப்பேன் என்று
காலங்கள் தானறிந்து வயதுகள் கணக்காய் கெணிப்பேனென்று
சீலமுடன் தியாகராச தேசிகன் பாதத்தே
சித்தம் மகிழ்ந்துமே மத்திமாபதி பாடி
(சோசியர் வந்தாரே)

**வசனம்** - அகோ கேளும் மகாராசனே ஆசீர்வாதம் வீசி பவா மகாராசனே

**ராசா வசனம்** - அகோ கேளுங்களய்யா சுவாமி சூரியவம்சந் துலங்கத் தக்கதாக தியாகராசருடைய

கிருபாடாட்சத்தினாலே நமது கொழந்தை புரந்தது

அதற்கு நல்ல சுப முகூர்த்தத்தில் நாமகரணம் செய்து சாதகம் கணிக்க வேணுமய்யா சுவாமி.

அப்படியே ஆகட்டும் மகாராசனே கொழந்தை பிறந்தது யாதொரு குறைவில்லை தங்கள் மனதில் நினைத்த பேர் நாமத்தை குறித்து பேர் வையுங்கோ மகாராசனே

**ராசா வசனம்** - அகோ கேளுமய்யா சுவாமி நம்முடைய குல தெய்வமாயிருக்க நின்ற தியாகராசருடைய கிருபையினால் வந்த பாலகனுக்கு வீதிவிடங்க சோழனென்று பேர் நாமம் இட்டோம் சுவாமி

**சோசியர் வசனம்** - அப்படியே சந்தோசம் மகாராசனே

## சபை விருத்தம் - ஆனந்தபைரவி

மங்கையு பாலன் தன்னை யேவாரியே கரத்தி லேந்தி
துங்கநான் சோழன் முன்னே துலங்கிட நாம கரணம்
திங்கள்தன் சடையன் ஆரூர் தியாகேசன் கிருபை யாலே
யிங்கித மாக வீதி விடங்கனே என்று இயம்பினாரே

**வசனம்** - இந்த பிரகாரம் மனுநீதி சோழ மகாராசாவின் குழந்தைக்கு வீதிவிடங்க சோழனென்று நாமகரணமிட்டு தாதிமாருடனே தாலாட்டு கூறிய விதம் எப்படியென்றால்

## தரு - ஆனந்தபைரவி

ஆரிராரோ ஆரிராரோ ராரிராராரோ
சூரிய வம்சத்தில் எண்ணுள்ளம் துலங்கவே
கீர்த்தி பெற்ற இன்பமே கண்வளராய்
மட்டில்லா ஆசையினால் இருபேர் மயங்கிடும் வேளையிலே

சட்டமாய் வந்துதித்த நான் பெத்த தங்கமே கண்வளராய்
கானலே நீரென்று எண்ணி கலைகள் கலைந்து
உழலையிலே மழைமாரி போலே வந்த நான்பெத்த மைந்தனே
கண்வளராய்
பிறவிக்குருடனுக்கு அரன் கண்புகழ்ந்து கொடுத்தது போல்
நரைதிரையான போது நான் பெத்த நாதனே கண்வளராய்
நத்தை வயித்திலே தான் அணியாக நல்முத்து வந்தது போல்
புத்திர சோகந்தீர்த்த நான் பெத்த புண்ணியனே கண்வளராய்
கொழு கொம்பில்லாமலே தான் கொழுந்து துழாவி தவிக்கையிலே
தழையவே நான் பெத்த தங்கமே கண்வளராய்
ஆனந்தபைரவியே சந்தோசமாய் அன்புடன் பாடினதால்
தானாக என் வயித்தில் வந்துதித்த தங்கமே கண்வளராய்
ராரிரரரோ ராரிரரரோ

## ராசாகலதுறை - பைரவி

மாதே அதிக சுந்தர மாமயில் அன்னமே யெதோ
புவிதன்னே ஆண்ட சார இசைந்ததினால்
மூதாதை செய்த தவத்தினால் ஈன்ற முன்மாரன் தன்னே
ஆதாரமாகப் பள்ளிக்கு வைத்து அழைப்பிப்பாயே

**வசனம்** - அகோ வாரும் பெண்ணே திருமனுதேவி மெத்த தவத்தினால் புத்திரனே

## தரு - பைரவி

அழைத்து நீவாராய் கண்மணி தன்னே
அழைத்துவாராய் அழைத்துவாராய் பெண்ணே
அருமைகுலம் விளங்க தழைக்க வந்த பாலனை
சபைதனில் இப்போது அழைத்து என்னடி

பெண்ணே தாமசம் உனக்கு
ஏதடி கண்ணே அண்ணல் தியாகேசர்
அளித்த பாலன் தன்னே அருமைப் பைரவி பாடி
பெருமையுடனே தேடி அழைத்து நீ

## தேவி விருத்தம் - சங்கராபரணம்

அறிவையோ தாதி மாரே அன்னமே சொல்லக் கேளாய்
திரிபுர மெரித்த ஆரூர் தியாகராசர் கிருபை யாலே
பெருமைசேர் சோழ நாடு பிரபல்ய மாக வந்த
செருவனே சபையி லிப்பே செலிதி யழைப்பிப் பாயே

**வசனம்** - அகோ வாரும் பெண்ணே பாங்கிமார்களே நம்முடைய இஷ்டதெயவமாயிருக்க நின்ற அசைந்தாடுந் தியாகராசர் கிருபையினாலே வந்த பாலகனுக்கு வீதி விடங்கனே அழைத்து வாரும் பெண்ணே பாங்கிமார்களே

"அப்படியே மகா பாக்கியம் மாதாயே"

## வீதிவிடங்கன் விருத்தம் - சுருட்டி

வெள்ளியங் கிரியில் வாழும் விமலநார் அருளி னாலே
அள்ளியே நஞ்சை யுண்ட ஆரூரா ரளித்த பாலன்
துள்ளியே எழுந்தி ருந்து தகப்பனார் அழைத்தா ரென்று
பள்ளிகள் ஓத ராச பாலகன் வருகின் றானே

## தரு - சுருட்டி

ராசாதி ராசனும் வந்தான் ராசாதிராசதீரன் நங்கை மகிழ்வ சூரன்
தாசனு தாசதாதன் தக்கிடத்தை தளக்குதோமென
ராசாதி திதாங்கு தித்தை தையென்று காலிலே
தாளம் வைத்தோங்கிடுடே மெய்மெயென்று

சுத்தாங்குஞ் சயவீரன் சுரத வீறாதி வீரன்
தகிடடத்கிடத மத்தாகிட தளங்கு தோமென்று
வச்சிர பதைக்க மாடவே மடந்தையர்கள் பக்ஷ பக்ஷமாய்
கொண்டாடவே
உச்சித கோலாகலன் உலகெல்லாம் இவனே லோலன்
தச்சனு தச்சனு தகதகதிரிகிட தளக்குதோ என
ராசாதி கோத்துரங்கள் மின்னவேதகதகன்ன
கோதை நடந்துன்னவே சத்தங்கிருகிருடன்
சமைந்த சுருட்டியென்ன தக்கிட தக்கிட தகதக
தரிகிட தளங்குதோம் என ராசாதி ராசனும் வந்தானே

**ராசா வசனம்** - அகோ வாரும் பிள்ளாய் கட்டியக்காரா நம்முடைய உபாத்தியாயரை அழைத்து வாரப்புள்ளாய் கட்டியகாரா

## வாத்தியார் வருகின்ற விருத்தம் - மத்திமாபதி

கைதனில் பிரம்பும் கொண்டு தாங்குறு மாலை மாதுகட்டி
மெய்யெல்லாம் நீறு பூசி மின்னிய பூணு லிட்டு
நையவே வார்த்தை பேசி நாதனார் சோழன் முன்னே
வைதுக முழுதும் ஓதும் வாத்தியார் வருகின் றாரே

## தரு - மத்திமாபதி

வாத்தியார் வந்தாரே பள்ளிஓத வாத்தியார் வந்தாரே
சாஸ்திர வேதகலை நுக்கியாணம்
நேர்த்தியுடன் நன்றாய் பார்த்துரைப்போமென்று
வாத்தியார் கைதனில் பொஸ்தகமும் அரைதனில் கட்டிய
வஸ்திரமும் துய்யவே அஸ்திரமும்பள்ளிதனில் சொல்லிய
விஸ்தாரமும் பெய் ஆபரணம் மிகவே துலங்கிட

சைவ சமய சகலர் அறிந்திட வாத்தியார் வெள்ளிப்
பிரம்பு கொண்டு சபைதனில் வேந்தர் அழைத்தாரென்று
துள்ள நடந்து கொண்டு மத்திமாபதி சொருராகம்
பாடிக் கொண்டு பள்ளியில் பிள்ளைகள் இஷ்டதமை
செய்தால் உள்ளது கண்டவர் உண்மையாய் போக்க வாத்தியார்
வந்தாரே

**வாத்தியார் வசனம்** - அகோ வாரும் வாங்களய்யா சுவாமி நல்ல சுபமுகூர்த்தத்தில் நம்முடைய பாலகனாகிய வீதி விடங்கனுக்கு நாலு வேதம் ஆறு சாஸ்திரம் பதினென்புராணம் அறுபத்தாறு கலைக்கியானம் தொண்ணூற்றாறு தத்துவம் மனுவியாக்கியானம் ஆனையேத்தம் குதிரையேத்தம் வில்வித்தை முதலியனது கற்பிக்க வேணுமய்யா சுவாமி.

## வீதி விடங்கன் வருகிற விருத்தம் - கல்யாணி

பத்துமே வயது சென்று பாங்குடன் பள்ளஓதி அஸ்திர
வித்தை யெல்லாம் அதிகமாய் அறிந்து கொண்டு இங்கு
பெத்ததாய் தந்தை முன்னே பெருமையாய் படித்த தெல்லாம்
வித்தைகள் சொல்ல வீதி விடங்கனும் வருகின் றானே

## தரு - கல்யாணி

வந்தான் வீதி விடங்கன் வாலிபமாகி வந்தான்
தந்தை அன்னையை போத்தி தங்க கட்டியம் கட்டி
விந்தை சதங்கையுடன் வேடிக்கை தண்டையிட்டு வந்தான்
மார்பிற் பதக்கங்களிட்டு தங்கம் இழைத்த
வயிரக் கற்களுமிட்டு காதில் முருகுமிட்டு
கணக பொற்பணியிட்டு வேத நாலுஆறு

சாத்திரம் வில் வித்தையெலலாம் கற்று
வந்தான் தங்க அரைஞாணுமிட்டு
யிருகரத்தில் குளிகை கடயங்களிட்டு அங்கினி
சாருந் தொட்டு அழகாய் முகாரியிட்டு சங்கீத வித்தை கத்து
சரநாடுந் தோளில் வைத்து வந்தான்
கிஷ்ட்ண கொண்டைகளுமிட்டு நெத்திதனிலே கிரி
சந்தனங்களிட்டு முடந்த உச்சிதமாரன் போலே
பக்ஷமுடன் கல்யாணி பாடி பாதம் பணிய
வந்தான் வீதி விடங்கன் வாலிபமாகி வந்தான்

## வீதி விடங்கன் விருத்தம் - ஆனந்தபைரவி

மாநிலத் தரச ரெலாம் வணங்கியே கற்பங் கட்டும்
பானுவின் குலத்துக் கெல்லாம் பானுவாய் விளங்கும் கீர்த்தி
ஞானமாம் மறையோர்க் கெல்லாம் நாடியே உரைக ளோதும்
தானுவா யென்னை யீன்ற தந்தையே சரண மய்யா

**வசனம்** - அகோ வாரும் என்னை பெத்த தந்தை தாய்மார்களே சரணம் சரணமய்யா சுவாமி

## ராசா விருத்தம் - முகதார கெவுளம்

போத்திபோத்தி யென்று உரைக்க வேதான்பூ பால நெழுந்
திருந்துமே பாலன் தன்னே பரவச மாகி யிப்போ
ஆத்திநில் வீத்தி ருக்கும் ஆரூரா ரளினா முலசா
வித்திரமுள் ளமட்டுந் தழைத்து நீவாழ்ந்தி ருப்பா யாக

**வசனம்** - அகோ வாரும் பிள்ளாய் பாலகநாகிய வீதி விடங்கா நாலுவேதம் ஆறு சாஸ்திரம் சந்திர சூரியருள்ள மட்டும் தழைத்து வாழ்ந்திருப்பாய் யெழுந்திரும் பிள்ளாய் பாலகா

## வீதி விடங்கன் விருத்தம் - கல்யாணி

அய்யனே யென்னை பெத்த அன்புள்ள அன்னை யாரே
செய்யமா மரைக ளோதுந் தீரத்த மாங்க மலைமூழ்கி
வய்யகம் புகழு மெங்கள் வண்மீகத் தியாக நாரே
மெய்யனே பூசை செய்ய விடையெனக் கருளு வீரே

**வசனம்** - அகோ வாருங்களய்யா சுவாமி கமலாலயத்திலே விதானம் பண்ணி வன்மீகத் தியாகநாரே தெரிசனம் பண்ணுதர்க்கு உத்தரவு கொடுக்க வேணுமய்யா சுவாமி

## தரு - கல்யாணி

சேவித்து வாரேனய்யா தியாகேசரே நான்
சேவித்து வாரேநய்யா
தவங்கள் செய்த பேர்க்குந் தரணி மனிதர்க்கும்
பாவங்கள் தீர்க்கும் நன்றாய் பரவுங் கமலை மூழ்கி
(சேவித்து)

தும்ப மலரெடுத்து சொர்ணமலர் தொடுத்து
யிம்பமான தொரு யிணையில்லா வில்வங் கொண்டு
(சேவித்து)

சம்பிரமான கொன்னை சாதி மலரும் புன்னை
வம்பாய் வீசுமுல்லை மலர்தனேயெடுத்து நான்
(சேவித்து)

வேதவேதாந்த விமலனாரே முக்கண் மெய்யனே
கல்யாணி பாடி மேவுந் தியாகரே நாடி

## உச்சா விருத்தம் - மோகனராகம்

உறைத்தோர் பாலன் தன்னை உகந்துமே உச்சி மோந்து
கரத்தினால் தழுவிக் கொண்டு காரிழை தன்னே பார்த்து
நரைத்தோர் நாளை தன்னில் நமதுடன் கலிகள் தீர
முறைத்திமும் முயீந்த நார்க்கு வாழ்த்திநீ யனுப்பி டாயே

**வசனம்** - அகோ வாரும் பெண்ணே திருமனுதேவி நம்முடைய சூரியவமிசம் துலங்க வந்த பாலகனுக்கு திருவாரூர்க்கு போயி தியாகராச் சடைதெரிசனம் பண்ணுதர்க்கு உத்தரவு குடுத்து அனுப்படி பெண்ணே

## தேவி விருத்தம் - ராகம்

உன்னிய பாலன் தன்னே உகந்துமே உச்சி மோந்து
தானுவாயி நீண்ட சோதி தியாகநார் தன்னே போறி
வேனதோர் நிதிகள் யெல்லாம் மிகவும் யெடுத்துக் கொண்டு
தோணவே மறையோர் கீந்து சுகமுடன் வாழ்ந்தி டாயே

**வசனம்** - அகோ வாரும் பாலகநாகி வீதி விடங்கா அனேக தெரவியம் யெடுத்து திருவாரூர்க்கு போயி தியாகேசரை தெரிசனம் பண்ணி வாரும் புள்ளாய் வீதி விடங்கா

## சபை விருத்தம் - அசாவேரி

பிரபல மறையோர் தங்கள் புகழ்ந்துமே முகூர்த்தம் பார்த்து
தீரமு டன்னே சேனை செப்புமந் திரிகள் சூழ
கரமதில் கும்ப மேந்தி கன்னியர் சூழ்ந்து நிற்க
மரகத தேரி லேரி வந்தனன் வண்மை தானே

**வசனம்** - அகோ தெப்படி யென்றால் வீதி விடங்கச் சோழ மகாராசன் திருவாரூருக்கு போய் தியாகேசரே செய்ய

வேண்டியதர்க்கு தந்தை தாயாரிடத்தில் உத்தரவு பெத்துக் கொண்டு நல்ல சுப முகூர்த்தத்தில் தேரேர தெருவில் பவனி வருகிறவிதம் யெப்படியென்றால்

## தரு - அசாவேரி

சிங்காரமாயந்த வீதிவிடங்கராசன் தேரோ பவனிவர ராசன்
பொங்கியதேமல்பணம்போலே மார்பினில்பொன்னென்னவே காண
தங்கச்சரப்பனிடு. . . .லா பரணங்கள் தகதகவாக. . .ன்ன
ராசாதிராசன்

சிங்கார யிந்திரன். . . . . மனம்
பொங்கித் தானுமே யி. . . . . .கிழ்ந்து
அந்த வசந்தனு மாரனு மந். . . . . .அரண்டு
பயந்து நிற்க ராசாதி ராசன் சிங்காரமாய்
கந்த மலர்க் குழல் வள்ளி பங்காளனும் கண்டு பயந்து நிற்க
சுந்தரமானதோர் சீதை பங்காளனை தோர்க்கவடி உடையான்
ராசாதி ராசன்

சிங்கார புத்திடங் கொண்டவரை போத்தி சாவேரி பாட
மத்தாள தாள ஓசை மண்டல மதிர்ந்திட
சிங்காரமாயந்த வீதி விடங்க ராசன்

## விருத்தம் - சௌராஷ்டகம்

நலமுடன் முகூர்த்தம் பார்த்து நாழிகை தப்பி டாமல்
பலபல வேத மோதும் பிறாமணாள் சூழ்ந்து நிற்க
வலமதாய் சுத்தி வந்து வரிசையாய் மன்னர் சூழ
சிலைமதன் போலே மைந்தன் தேரேறி பவனிவர ராசன்

**வசனம்** - யிந்த பிரகாரமாக வீதிவிடங்க சோழ மகாராசன் ரத கச துரகபதாதிகளுடனே திருவாரூருக்கு போகுவிதம் யெப்படி யென்றால்

## தரு - சௌராஷ்டகம்

மெச்சு மாமணித் தேரேறி வீதிவிடங்கன் பவனி வர ராசன்
உச்சி மணிகளாட உலாவிய முடிகள் போலே
கொச்சு முத்து கோர்வையாட கொடிமதி போல் விளங்க
(மெச்சு)

பச்சகல்கள் கம்பமாக பலவகை ரெத்தினமாக
உச்சித ரதி மதன் போல் உலாவியே கொடியிலங்க
(மெச்சு)

கச்சையணி மாதராட சௌறாஷ்டகம் பாட
அச்சமில்லா ஆரூர் நாடி அன்புடன் தியாகரே தேடி
(மெச்சுமாமணி)

## சர்க்குணன் விருத்தம் - கம்போதி

மன்னவன் மைந்த நாரும் வன்மையாய் தேரி லேறி
முன்னமே அமைச்சர் கூட மொய்த்துமே நடக்கும் போது
தின்மையாய் சகுனங் கண்டு திடுக்கென யெழுந்து மந்திரி
மன்னவன் மைந்த நார்க்கு வரகுட நுரைக்க லுற்றேன்

## தரு - காம்போதி

கண்ணெதிர்க் காணுதய்ய வேந்தநாரே தலை கண்டதுண்ட
மாகுதய்யா வேந்தநாரே
பின்னேயின்னங் காணுதய்யா வேந்தநாரே பொல்லாபேய் குறுக்க
வருதய்யா வேந்தநாரே
வன்னநரையான் கட்டுது வேந்தநாரேயிது
மத்திபமே போகெண்ணாது வேந்தநாரே
பரந்தெதிரே வருகுதய்யா வேந்தநாரே
வரந்தருங் கெருடன் கட்டுது வேந்தனாரே

காலன் வந்திடுவான் போகொண்ணாது வேந்தனாரே
சிரகொதிக்கிக் காடைகட்டுது வேந்தநாரே
பொல்லா சின்னம் வரும் போகொண்ணாது வேந்தனாரே
பய்யரவங் கட்டுதய்யா வேந்தநாரே
அபால்லாத பயங்கள் கண்டு மீளுதய்யா வேந்தநாரே
வய்யகத்தில் மோதும் வேந்தநாரே
ஒத்த மறையவ ரெதிரெ வருகிறார் வேந்தநாரே
நய்யுமித்த சகுனமெல்லாம் வேந்தநாரே
ரெண்டு நாள் கழித்து போவோம் வாரும் வேந்தநாரே
கண்ட சகுனங்களெல்லாம் வேந்தநாரே சுவாமி
கம்போதியால் பாடி சொன்னேன் வேந்தநாரே

## வீதிவிடங்கன் விருத்தம் - மோகனம்

கலைகளுக் குரைகள் சொல்கா ரியவித மறிந்து
பலபலசாஸ் திரமோ தும்யென் பரவுமந் திரியே கேளாய்
நலமுடன் யிளப்பம் வந்தால் நமக்குமே வருகும் போது
விலகினால் மீளா தெந்தன் விதிவசந் தப்பு மோதான்

**வசனம்** - அகோ வாரும் பிள்ளாய் மந்திரியே நீ சகல கலை வல்லபமுமறிந்திருந்தும் ஒன்றுந் தெரியாதவனை போல் அபசகுனங் காணு தென்று சொல்ல வந்தாயே பரமேஸ்வரன் ஆக்கினை படிக்கி யெள்ளளவுந தப்பாதும் பிள்ளாய் மந்திரியே

## தரு - மோகனம்

தப்பினவரெவர் காணும் விதி வசத்தே தள்ளினவர் ரெவர் காணும்
மெய்யான சந்திரனும் மேனிக்க யிந்திரனும்
அப்பனிச் சடையோனும் ஆடிநார் சுடலைதனில்
(தப்பிநவர்)

வேலைதனில் வேந்தநாரும் வலியை நாடியே மேவியே
யிருக்கும் போது
காலநான் அரவம் வந்து கடித்து மடிதானய்யோ
(தப்பிநவர்)
வாலி நல்ல வரம்பெத்தான் வந்தவர் மலனை வஞ்சினையோ
பாதியெடுத்தான்
சீலமுள்ள ராமன்பால் க்ஷணத்தில் மடிந்தாநப்பா
(தப்பிநவர்)
அலைகடலில் கப்பலோட்டி மோகனம் பாடி அங்கே ஒரு
ஆகமுமாகி
நிலவரையில் தானிருக்க நெடியவன் பாம்பாலிறக்க
(தப்பிநவர்)
காணும் விதிவசத்தேத் தள்ளிநவ ரெவர் காணும்

## விருத்தம் - சங்கராபரணம்

போதங்கள் விகந்த பூபா லமைந்தனே சற்று கேளாய்
வாதினை மிகலு மிப்போ வருவது அறிவோ மய்யா
சோதினை போலே மெத்தத் துடுக்கென சகுன மாக
மேதினி சென்று நாமும் விடிந்தபின் வருவோம் வாரீர்

**வசனம்** - அகோ வாருங்களய்யா சுவாமி தாங்களறியாத சாஸ்திரம் நான் யென்னா சொல்லப் போறேன் அடியேனுக்கு தோனின மாத்திரம் சொல்குறேன் யின்றைய தினம் பட்டணத்துக்கு போய் நாளைய தினம் வருவோம் வாருமய்யா சுவாமி வீதிவிடங்கள்

## தரு - சங்கராபரணம்

வாருமென்று சொன்ன மந்திரியே யிப்போ
தேரேறி நாமும் திரும்ப ஒண்ணாது - அகோ

வாரும் பிள்ளாய் மந்திரியே க்ஷத்திரியாள்
தர்மத்துக்கு முன்வைத்த காலை பின்வைக்க
ஒண்ணாதும் பிள்ளாய் மந்திரியே ஒண்ணாது
காணிந்த உலக சகுனந்தள்ளி முன்னே அடியை
வைத்தால் வேதினையாகும் - அகோ வாங்களய்யா சுவாமி
இந்த உலக சகுனத்தே தள்ளி நடந்தால் அனேக
வேதனை உண்டாகுமய்யா சுவாமி
ஆவதும் அழிவதும் ஆராலே சொல்ல போமோ
தீவினை நல்வினை தெய்வமே துணைகாண்

**வசனம்** - ஆகுறதும் அழிகுறதும் திருலுள செயலே அல்லாமல் நம்மால் ஆவதொன்றுமில்லை ஆனால் தெய்வசகாயம் பிள்ளாய். தெய்வமே துணையென்று தெரிந்து இராமலே யிவ்வகை சாஸ்திரம் யேன் வகுத்தனர் காண்

உலகத்திலுள்ள மனிதர்கள் தெய்வமே துணை யென்றிராமல் சாஸ்திரங்களுண்டு பண்ணி வகுப்பானேன் அதை யெனக்கு தெரியப்பட சொல்ல வேணுமய்யா சுவாமி

## தரு

வகுத்தார்கள் பெரியோர்கள் வய்யகத்தோர்களுக்கு
பகுத்தறிவாய் நன்றாய் பார்ப்பது ஞானம்

**வசனம்** - சாஸ்திரங்களுண்டு பண்ணினது யென்னத்துக் கென்றால் பஞ்சபூதத்துக்கும் அறிவு மேலாய் விளங்கா நின்ற ஞான மென்னப்பட்ட போதனையை அறிந்து நாலாம் பதவியே அடையுதர்க்காக உண்டு பண்ணினதும் பிள்ளாய் மந்திரியே ஞானம் வந்த பேர்க்கு நாடென்ன நகரமென்னமான விட்டே நல்ல வசையில்லா காடே

ஞானம் வந்த பேர்கள் காடுகள் செடிகளிலே திரிந்து

சஞ்சாரம் பண்ண வேணுமே அல்லாமல் ராக்ஷிய பாஜபாலனம் பண்ணுகுறதற்கு காரணமில்லே அய்யா சுவாமி

## தரு

காடே திரிந்தாரே கதை ஜென ராசன் நாடாண்டிருந்துமே
ஞானம் ஒத்தணர் காண்

**வசனம்** - செனகர் மகாராசாவாகப் பட்டவர் அக்கினி ஒருபக்கத்திலேயு பன்னீர் விட்டுக்குழைத்த சந்தனம் ஒருபக்கத்திலேயு யிது யிரண்டு முடந்தையாய் மூன்று நீர்க்குணமாய் சம்சாரத்தோட ராக்ஷிய பரிபாலனம் பண்ணிக் கொண்டு வருகலையே சொல்லும் பிள்ளாய் மந்திரியே

## தரு

ஒத்த பாரியான முரிதியான பேரால் சித்தனு
விரியாடி திரிந்தார் காணப்போ

**வசனம்** - அவருக்கு பாரியாளானவள் அவர் மனதே போலே ஒத்து இருந்தபடியினாலே அவர்க்கு ஞானம் இன்பம் சித்திச்சுது அப்படி இருந்தால் ஓமக்குங்கிட்டுமய்யா சுவாமி

## தரு

அப்போது மிப்போதும் அழண்டு மனம் வெறுத்தால்
யிப்போ வருதுங்காண் யியலான யின்பம்

**வசனம்** - யிருவரிருக்க படமனங்கு விந்து ஆறாதாரத்தே பத்தி சோதி தெரிசனமானால் யெப்படி அந்த ஞானம் சித்திக்கும் பிள்ளாய் மந்திரியே

## தரு

யின்பமாக சொன்ன யியலான வார்த்தையை
வம்பாய் பேசுவது மார்க்கமோயிது காண்

**வசனம்** - நான் சொல்லுகிறதே யின்பமாக யெண்ணி கொண்டு வராமல் வம்பாய் பேசுவது மர்க்கமல்ல அய்யா சுவாமி

## தரு

காணாதிருந்தாலுஞ் சுருதி சங்கராபரணம்
தானாக பாடினேன் தவசு மந்திரியே நம்முடைய
இஷ்ட குலதெய்வமாயிருக்கா நின்ற அசைந்
தாடுந் தியாகராசரை தரிசனம் செய்தால்
சகல பாவமும் சகல பீடையு நிவர்த்தியாகும்
ஆதலால் தேரை நடத்தும் பிள்ளாய் மந்திரியே

**சபை வசனம்** - இந்த பிரகாரமாக மந்திரி சொன்ன வார்த்தை தள்ளி போட்டு வீதிவிடங்க சோழ மகாராசன் திருவாரூர்க்கு தேரேறி போகுற விதம் யெப்படி யென்றால்

## தரு - மோகனம்

தங்கரதமேறியே துரை சாரியே வாரூர்
பொங்கும்புனல்வாரதி சூழ் புவி யெங்கும்புகழ ராசசிறோன் மணி
தங்க கட்டியக்காரர் பராக்கு பராக்கென்றே
ஜெய அட்டாள தேச உலச்சலா மிட்டே வர
சுயதவளக் குடையுதுய்ய பவள கொடியுபய்ய
பம்மை தவண்டைகள் தம்புருந்துமி கொம்பு சில சில
சங்கு முழங்கிட - ஆனை பரி தேர்களும்

அணியணியாக நடக்க - வெகுசேனை பலதுளி
யிரவி தெரியாமல் மறைக்க கொடியாட
மந்திரிமார்கள் கூட வெங்கல பேரிகை அடிபட
துடியது திடுதிடு திடெனவே பட கைமுட முரசு
திடுதிடு திடெனவே தங்க - பாவானர்கள்
நவரச மிகு கவி பாடி கொண்டாட
பெண்கள் பூவாளியில் மோகன ராகத்தை பூட்டி
கண்டுபாட சுய காந்திமதியு துய்ய யேந்திவரவும்
பய்ய - கதிர் பதிமதி மதிபாரபானு
ரிதிபதி யதிபதி சூரபானு தங்கரத மேறியது

## சபை விருத்தம் - தோடி

மந்திரி உரைத்த போது மைந்தனுங் கேட்டி டாமல்
அந்தமாம் வீதி தன்னில் ஆரூரில் வருகும் போது
விந்தையாய் யீசன் தானும் விமலனுங் கண்ணுங் கண்டு
சுந்தர முகத்தா னுக்கு சொல்லலு துடங்கி னாரே

**வசனம்** - அகோ தெப்படி யென்றால் வீதிவிடங்க சோழ மகாராசன் சொன்ன வார்த்தையை தள்ளிப் போட்டு தேரேறி திருவாரூருக்கு வருகிற போது திருவாரூரிலே பிரகாசமாய் விளங்க நின்ற அசைந்தாடுந் தியாகராசர் தன் உமையாளாகிய அல்லியங் கோதை கமலம்பாளுக்கு வீதிவிடங்க சோழனுடைய பத்தி விசுவாசத்தை சொல்லுகிற விதம் யெப்படி யென்றால் - சுவாமி

## விருத்தம் - மோகனம்

மருமலர் முடிக்குங் கூந்தல் மங்கையே சொல்ல கேளாய்
பொறுமையு அறிவு முள்ள பூபாலன் யீன்ற மைந்தன்

தருமமும் அரசு நீதி தன்னையே வளர செய்வான்
கருமமும் அணுகி டாது கன்னியே யிவன் தனக்கே

**வசனம்** - அகோ வாரும் பெண்ணே பார்பதியிதோ நகரத்தே யாளப்பட்ட மனுநீதி சோழ மகாராசாவின் குமாரன் வீதிவிடங்க சோழனுக்கும் அவனிலையு யிவன் சத்திய வந்தனடி பெண்ணே - அம்மா

## விருத்தம் - மோகனம்

பொய்தனை உரையா நென்றா புகழ்ந்துமே உரைத்தீ ரிப்போ
வய்யகம் முழுது மாறு மனுநீதி மன்ன நார்க்கு
செய்வது கருமம் கேளீர் செங்கோல்கள் முறைமை யோடே
அய்யனே உரைத்த வார்த்தை அவர்க்குமே அடாது கண்டீர்

**வசனம்** - அகோ கேளுங்களய்யா சுவாமி பூலோகத்தை ஆளப்பட்ட ராசராசாகளுக்கு சத்தியம் அசத்தியம் ரெண்டும் உடைந்தயா யிருக்குமே யல்லாமல் சத்திய வந்தனென்று சொல்ல தகாதய்யா சுவாமி

## சுவாமி விருத்தம் - மோகனம்

சோதிகன் செய்வோம் யாமும் தோகையே யாரு மிப்ப
சோதினை செய்ய வேதான் வேந்தனார் பாலன் தன்னே
நீதியா அரசு செங்கோல் நேமுகந் தப்பி டாமல்
சாதிகள் செய்வான் மெத்த சத்தியந் தப்பி டானே

**வசனம்** - அகோ வாரும் பெண்ணே பார்வதி யிவனை அதிக கத்திய வந்தனல்லவென சொல்ல வந்தாயே ஒன் கண் முன்னே வீதிவிடங்க சோழனுக்கு சோதிகள் (சோதலை) செய்குறேன் பாரும் பெண்ணே பார்வதி

## விருத்தம் - கல்யாணி

யேமனை கண்ணு(கன்னு) தாக்கி யீசனும் பசுவ தாக
சோமனும் ரவியுங் கண்ணு சுரமுனி றோம மாகி
சாமனை பயின்றோன் கொம்பால் கமலனும் கோம யாகி
தாமரை உதிக்க ஆரூர் தியாகேசர் வருகின் றாரே

**வசனம்** - அகோ தெப்படி யென்றால் யிந்தப் பிரகாரமாக பிரமா விஷ்ணு ரெண்டு கொம்பாகவு சந்திர சூரியாள் ரெண்டு கண்ணாகவு மூதேவி முகமாகவு சீதேவி பின்தட்டு யோனியாகவு அஷ்டலஷ்மி நாலுகாலாகவும் நாலு வேதம் நாலு முலையாகவு வேதசாஸ்திரங்களெல்லாம் பாலாகவும் முப்பத்து முக்கோடி தேவர் நாற்பதெண்ணாயிரங் கோடி ரிஷி அஷ்டவசுக்கள் கின்னரர் கிம்புருடர் சித்து வித்தியாதார்களையே காத்திருந்துளுள் துவாதசாதி . . . . றோமமாகலு சந்தி சதை தோலாகலுருத்திரன் மகேசுரன் ரெண்டு காதாவு சதாசிவம் வாலாகவு யிந்தப் படியாய் திருவாரூரிலே சுயம் பிரகாசமாய் விளங்கா நின்ற அசைந்தாடு தியாகராசர் யெமனை கன்னாவிட்டுக் கொண்டு தானொரு பசுவாய் வருகிற விதம் யெப்படி யென்றால்

## தரு - கல்யாணி

பசுவருகுற மகிமை பாருங்கள் தியாக ராசேந்திரன்
பசுவருகுற மகிமை பாருங்கள் பசுவருகுற மகிமை
பாரும் பஞ்சவர்ண சாயல் மிஞ்சிய தேசரும்
யிதம் பெரு மனுநீதி சோழன் நிநவுதுரிய
அதிபேரும் நேசன் வாலை துணைக்கு வேகமாகவே
அம்மம்மா வென்று வாயை திறந்து நாவுலாவியே
காலுநாலும் வெள்ளையாக கழுத்து நெத்தியிலு

வெளுப்பதாக மேலே வர்ண சிவப்பதாக
விளங்கும் படியு கருப்பதாக

(பசு)

சத்தி சிவனும் ஒன்றாய் கூடியே மனுராசேந்திரன்
பத்தி சோதிக்கு அருமை கொள்ளவே
சித்த கெணங்கள் கீதம் பாட தேவர் முனிவர் புஷ்பம் போட
காகதனும் ஆவாக ஆட காலனுஞ் செங்கன்னாக ஓடி

(பசு)

தண்டை சூடிய பதங்கள் சூடியே நால்காலினாலே தாவி நடந்து
மேவி ஆடியே
வெண்டயம்பூண்ட கொம்பு மின்ன வீரவெண்டயங்காலில்துன்ன
யெண்டிசையில் கலயாணி சொன்ன யேமனுஞ் சொங்கன்னாக
நண்ண

(பசு)

## தோடி - விருத்தம்

வீருடந்த கன்னும் விரண்டு மேதுள்ளி கொண்டு ஓட
சாரியா வருவோ ரெல்லாம் தடுத்துமே நின்றி டாமல்
பேரிகை சப்தத் தாலே மிரண்டுமே அரண்டு கொண்டு
தேரது உருளை குள்ளே செங்கன்னு மடிந்து தன்றே

**வசனம்** - யிந்தப் பிரகாரமாக வீதி விடங்க சோழ மகாராசன் ரதமேறி திருவாரூர் வடக்கு வீதியிலே வருகிற போது எமனாகிய பசுவின்கன் துள்ளி துள்ளி கோண்டோடி வந்தும் சேனாசயினங்களாகிய ரதக சதுரகபதாதிகள் மறிக்க அகப்படாமல் தேர்க் காலில் அகப்பட்டு மடிந்தது காண்க

## விருத்தம்

மடிந்ததோர் கன்னே தானும் வாகுடன் தேடிக் கொண்டு
அடியதை முகந்து கொண்டு அலறியே அம்மா வென்று
நெடியமால் தேவர் காண நேரிழை உமையாள் காண
கடுகவே ஓடி சென்று கன்னதைக் கண்ட தங்கே
கண்ணதை கண்ட போது கடுகியே நடுக்க முற்று
விண்ணவர் தேவ ரெல்லாம் விலவிலத்திட வேதி யாகம்
கொண்ணவனெ வன்டா வென்று துரத்துவேன் கொம்ப லென்று
நிண்ணதோர் மைந்தன் முன்னே நெரியுட னலரிந் தன்றே

**வசனம்** - இந்த பிறகாக வீதிவிடங்க சோழ மகாராசா தேரில் கண்ணரைய. . . டதை பசுவானது கண்டு கண்ணீர் விட்டு கதறுகிற விதம் எப்பெடியென்றால்

## தரு

கதறுமாங் கண்கள் கண்டு அலறுமா பசு உயதரியே உள்ள
பொங்கி சிதறிய சேமங்கள் சிதறிக் கிடந்துமந்த
சின்ன கன்னே கண்டு கதருமாங் கன்னை
மண்ணும் மலையுமற்ற மரங்கள் கூடநின்று
பெண்ணுருவாகவே பேதையாக நின்று கதருமாம்
அஷ்ட தேசங்களெட்டும் திட்டு செவிடுபட்டு
முட்டிமுட்டியே ஓடி துவண்ட கன்னே கண்டு
கதறும் புன்னுகவராளியே புகழ்ந்து பாடிகண்டு
நன்னாக யெல்லோர்க்கும் நாக்கை நீட்டி கொண்டு கதரு

## வீதி விருத்தம்

மந்திரி மாரே யிந்த மட்டில்லா சேனைக் குள்ள
யிந்தவெண் பசுவு தானும் யென்முன்னே கதறு வானேன்

சிந்தையுங் கலங்கு தய்யோ திடுகென திரும்பி போயி
விந்தைக ளிதுக ளென்று மேவியே பார்த்து வாராய்

## தரு

அறிதுவோம் வாரீர் பசு அலருதேயா நீர்
கரிகள் பரிகள் சேனை தளங்களும்
பேறிகிமரிகி வருதும் வழியில்

(அறிது)

சித்த மயங்குதே பசு மெத்த தியங்குதே
வருவெள்ளம் அந்தனையுந்தாண்டி சற்றும் பயமில்லாத புத்தியுள்ள கண்ணே

(அறிது)

யிப்படி பசுவீன்ற கண்ணே விட்டுனான் போவதுண்டா
அஷ்டகெஜமே ஸாந்துஷ்ட நேசன் சொல்ல
கட்டளையே தியாகரிட்ட சாபமிதோ

(அறிது)

## விருத்தம்

ஆரிலோர் கடமை வாங்கி அசையாத மணிகள் கட்டி
சூரிய குலத்து தித்த சோழராசேந் திரனின் பாலா
சாரிராம் வருதும் போது சகுனமுங் கண்ட தாலே
தேரது உருளைக் குள்ளே செங்கண்ணும் கிடந்த தய்யா

**வசனம்** - அகோ வாருங்களய்யா சுவாமி நாம் வருகும் போது அபசகுனங் கண்ட படியினாலே ஒரு பசுவினது கன்னது நம்முடைய தேருருளைக்குள்ளே வந்து அகப்பட்டு மடிந்து கிடக்குதய்யா சுவாமி

## தரு - கல்யாணி

ஆ ஆயிதுவென்னயா வந்திரே திரேகம் நடுங்குதய்யோ
பவுனி வந்திடவும் மந்திரி சகுனங் கண்டிடவு அதை
பாவி நான் கேளாமல் மேவி வருகையில்
தாவியே யிந்த கன்ஆவி பிரிந்ததும் ஆ ஆ
ஆரூர்தனில் வாயு அன்யாயமாம் கண்மாராவு
வீரிய கல்யாணி மேவியே பாடினேன்
காரியமோயிது கடவுளீசரே ஆ ஆயிது யென்ன பாவவிதி

## விருத்தம் - முகாரி

அரகர சிவனே தியாகா அரவணிந் தவனே நாங்கள்
பாவியே பூசை செய்த பலனது பலித்தா போல
திரளதாய் துகூத் தோடே தேரினை விட்டி றங்கி
தரைதனிலே கண்ணே பார்த்துத் தயங்கிய புலம்ப லுக்கு

## தரு - முகாரி

யெப்படி மாண்டுதய்யோ பசுவின் கண்ணெப்படி மாண்டுதய்யோ
மெய்ப்பான சேவுகர் மொய்ப்பாய் நடக்கும்போது
தப்பிஓடிச் சென்று யிப்பே உருளைக்குள்ளே
யெப்படி வெள்ளட பெருஞ்சேனை தியாகேசா
மிகுந்துவருகயிலே கள்ளத்தின் மாய்ந்து
ரதந்தனில் துள்ளி அரைந்ததுய்யோ
யெப்படி இப்படி பசுவாய் ஓடிதியாகேசா
பரிந்து வரிந்து தேடிமுட்டி முகாரி பாடி சிவ சிவா
முழிந்து யிருந்தேனோ யெப்படி காலம்
தரு பந்துவராளி யென்று செய்துவேன்

நான்யோது செய்துவேன் யிந்த வசைக்கி
நான் யென்னு செய்துவேன் சின்னகன்னுமே தியாகா
வின்னமாச்சுதே

மன்னர் பேசவே வசைகளாச்சுதே
துன்னவே மனம் புண்ணு நோகுதே
என்னா செய்துவேன் தியாகராசரே
கண்கலங்கவு கன்இங்கே மடியலு
எங்கள் பாவமோயிது ஞாயமோ
ஞாயம் ஞானிகள் தியாகநேய மாதர்கள்
உபயமோயிது நானறிகிலேன்
சந்தோசமாகவே சாமி உன்னை அடைந்தேன்
பந்து வராளியே பாலன் பாடினேன்

## வீதி விருத்தம் - முகாரி

திடமுட நாளை சேனை செப்புமந் திரிகள் சூழ
யிடமில்லா வருகும் போது யேகியே யிந்த கன்னும்
படபடெண்டு உருளைக் குள்ளே பதறியே மாண்ட வாரும்
விடமுழு துண்ட கண்ட விமலநார் கிருபை தானோ

**வசனம்** - வாரும் பிள்ளாய் மந்திரியே அனேகஞ் சேனை சூழ்ந்து வருகுற போது இந்த பசுவின் கன்னானது நம்முடைய தேரச்சுக்குள்ளே அகப்பட்டு மடிந்து போனது தியாகராசருடைய சோதனை போலே காணுது பிள்ளாய் மந்திரியே

## தரு - முகாரி

மாதர் பசித்திருக்க சிவசிவா வைந்து நானுண்டேனோ
பிதாவை பழித்து உலகில் யான் பாவி பேதகஞ் செய்தேனோ

வேதம் படித்தோரை நான் பாவி பேதகஞ் செய்தேனோ
சூது விளையாடி மாதுவைநான் சுத்தமா யுண்டேனோ
சுத்தத் தாரதன் னே யிப்போ யிகழ்ந்து நான் சூதான வார்த்தை சொல்லி
புத்தியில்லாமலே தான் குருவை பணிந்து கைகூப்பினேனோ
ஓதிய பள்ளியிலே வாத்தியாருண்டனவே யடிக்க அவரை
வாதினை செய்யவேதான் முகாரியை மனதில் நினைந்தேனோ

## வீதி விருத்தம் - தோடி

மன்னமந் திரியே யிந்த மட்டிலா பாவந் தானோ
கண்ணெதிரே காண யீசன் கட்டளை தானோ அய்யோ
முன்னுள்ளோர் பாவந் தானே மூண்டுதோ யெந்த னுக்கு
யென்னகா ரணங்க ளொன்றும் யின்றுநா னறிகி லேனே

**வசனம்** - வாரும் பிள்ளாய் மந்திரியே யிப்போ்பட்ட பாவமானது யென் கண்ணினாலே காணும் படிக்கி தியாகராசருடைய சோதினையோ யென் தாய் தந்தைக்கு வந்துரையாயோ யாதொன்றும் அறிகிலேன் பிள்ளாய் மந்திரியே

## மந்திரி விருத்தம் - முகாரி

அய்யனே நீரு மிந்த ஆனதோர் கன்னே தானும்
பய்யலே அடித்த துண்டோ? பதறியேகி லோசிப் பானே
மய்யிடுங் கண்ணி பாகர் வசந்தநார் தியாக நாரும்
செய்வது தானோ யிந்த தீவினை அறிகி லோமே

**வசனம்** - வாருங்களய்யா சுவாமியிந்த பசுவின் கன்னே நீர் அடித்து கொன்னதுண்டோ அதுவும் யீசுவர ஆக்கினையால் மடிந்து போனதர்க்கு தேவரீர் கிலேசப்பட வேண்டாமய்யா சுவாமி

## தரு - முகாரி

பாலொழுகி முலைசுரந்து வாடுதே பசுயிந்த பாவத்துக்கு
யென்னா செய்வேன் பரமநாரே

வேலை சூழலகப்பட்ட கப்பல் போலே பசுமிரண்டு
சுத்திமெலியுதே பாரும்

அக்கினிக்குள் ளகப்பட்ட சர்ப்பம் போலே பசு அரண்டு
அரண்டு சுத்தி அலையுதே பாரும்

நீலகண்டரான திருத்தியாகநார்க்கு யென்னா நேர முகாரி பாட
நேந்துதோ பாரும்

காமசகம் அங்கயில் மான்மழு செங்கயி லேந்திய
அரவமுந்தரித்தருள்

ஆரூர் நாதா துங்கமாஞ்செறு பசு யெந்தனால் மடியவு
தொல்லையென் செய்குவேன்

தில்லை வாழ்வே சங்கையில்லாமலே யெவரென்னை
யிகழவுந்தருண மாச்சுதே

சாமிநாதா பங்கமும் வராமல் அங்கையோர்

வில்லடிப்பட்ட வரமங்கைதன் பிராணநாதா

யீங்கிதா உன்னையன்றி வேறுமில்லை

பங்கமும் வராமல் யென்னை யாளும் சங்கீதா வின்னை

உலகம்மீந்த கங்காள ரூபனே கருணை வாழ்வே

## தரு

யென்னா செய்வே யேது செய்வேன்

மந்திரி மார்களே னானேது செய்யப்

போறேன் மந்திரி மார்களே

சின்ன யிளங் கன்னு மிங்கே

பின்ன மாச்சுதே யென் சிந்தை

புண்ணுனொந்து வாடலாச்சுதே
மன்னவரோ டென்னை கூடி மாதவஞ் செய்தயிந்த
மாதவ மளித்த வரமாக்குமோ
மந்திரி சொன்ன மொழி தன்னே யானுங்
கேட்டிடாமலே தியாகர் சூதோ நானறியேன்
சொல்லுவீர் மந்திரி அபசகுனங் கண்டு
யானும் பவனிவந்தேனே யிது யாரிட்ட சாபமோ
தானறிகிலேன் மந்திரி
பத்து மாதமும் சுமந்து பெத்த ஆவுக்கோ
பால் சுரந்து மேலுதரிகால் பதறாரே
சுத்திவந்து கன்னே பசுநக்கி வாடுதே
சுழடண்டு வாய் திறந்து சோபம் போடுதையே
திசையிலுள்ளோர்க ளென்னை மெத்த நகைக்க
இறையவர் என் தலையில் யெழுதினாரோ சொல்
புத்திடங் கொண்டே வளுங்காத்தனே
யானும் யொம்மை போத்தியே காபி
பாடியு காத்துதே பாவம்

## வீதி விருத்தம் - நாதநாம கிரிகை

விந்தையாய் யீசன் மேவு சோதினை கள்தா னோயென்
தந்தைதா யிருவர் செய்த தவத்துடன் மகிமை தானோ
அந்தமா ஆவின் கண்ணே ஆனதே கொன்ன தாலே
மந்திர வாளி நாலே மாந்துவேன் உயிரா குரனே

**வசனம்** - வாரும் பிள்ளாய் மந்திரியே யிந்த பசுவின் கண்ணெ அரைந்து கெனன்ன படியினாலே யிந்த கன் பழிக்கு யென்கை மந்திர வாளினாலே யென்னுயிரை மாய்ந்து கொள்ளுவேன் பிள்ளாய் மந்திரியே

## மந்திரி விருத்தம்

மாந்துவே னென்று சொன்ன மன்னவன் மைந்த னாரே
காத்துதே சகுண மெல்லாங் கைதனில் பலித்தாய் போலே....
ந்துமே மாளி புக்கி நின்றுமே யின்று வந்தால்
தோத்திடா யிதுக ளெல்லாந் துன்பமும் விலகி போமே

**வசனம்** - வாருங்களய்யா சுவாமி யிந்த பசுவின்கன் பழிக்கி தேவரீர் உயிர் கொடுக்குறோமென்று சொல்ல வந்தீரே நாம் வருகும் போது அபசகுணங் கண்டுதே அப்பவே பட்டணத்துக்குப் போய் யின்னயதினம் வந்தால் யிந்த துன்பம் விலகி போமய்யா சுவாமி

## தரு - தன்யாசி

விலகுமெண்டு சொன்ன விதிப்பயனே
வராலேது . . . .ந்த வரெவர்
காண் சொல்லு மந்திரியே

**வசனம்** - மந்திரியே நேத்தய தினம் பட்டணத்துக்குப் போய் யின்னையதினம் வந்தால் யாதொரு வினைகள் வரமாட்டாதென்று சொல்ல வந்தாயே யாவராலும் விதிபயனைத் தள்ளின பேர்களுண்டோ சொல்லும் பிள்ளாய் மந்திரியே தள்ளின மார்கண்டன் தலைவிதி வசந்தன்னே வல்லளித்த வரம் வாழ்ந்திருக்கிலையோ

**வசனம்** - வாருங்களய்யா சுவாமி மார்க்கண்டனுக்குச் சிவன் பதினாறு வயது கொடுத்திருக்க அவருடைய சிவபூசை மகத்துவத்தினாலே என்றும் பதினாறு வாங்கிக் கொள்ளவில்லையா சொல்லுங்களய்யா சுவாமி வாழ்ந்த மார்க்கண்டனுக்கா மளியே பூமிதனில் தாழ்ந்து உதைத்தது தலை விதியில்லவே

**வசனம்** - மந்திரியே மார்க்கண்டன் தவத்தினாலே தள்ளி வாழ்ந்தாரெண்டு சொல்ல வந்தாயே கொண்டு போக வந்த யமனை பரமேஸ்வரன் உதைத்து பாதாளத்தில் அழுந்தி போவானே அதுவும் விதி வசமல்லவோ சொல்லும் பிள்ளாய் மந்திரியே

விதியெழுதின அந்த வேந்தன் சிரசு போக அது எழுதின தேவர் அறிய சொல்வீரே

**வசனம்** - வாருமய்யா சுவாமி சகல சீவ செந்துகளே உண்டாகப்பட்ட பிரம தேவருக்கு அஞ்சு சிரசிலே ஒருசிரசு கிள்ளுபட்டுப் போவானேன் அவருக்கு எழு தினவர் யார் சொல்லுமய்யா சுவாமி

சொல்லுவதே தந்த சிவனார் மகிமைதனை வெல்லுவதெவர் காண் மிக்க மந்திரியே

**வசனம்** - மந்திரியே பிரமாவுக்கு எழுதியவர் யாரென்றால் சகல சிவாத்து மாக்களிடத்திலே யிருந்து விளங்கா நின்ற பரமேஸ்பரனுடைய மகிமையை ஒருவராலும் வெல்ல போதுமோ சொல்லும் பிள்ளாய் மந்திரியே

அறிதான யீசனும் அழண்டு பசியெடுத்துத் திரிவதும் அந்த திசையான புவியில் சுவாமி சிவனுடைய மகிமையை ஒருவராலும் அளவிட போகாதென்று சொல்ல வந்தீரே பரமேஸ்வரன் யிந்த புவியிலே பிச்சை யெடுத்து திரிய வேண்டிய காரியமென்ன சொல்லுங்களய்யா சுவாமி

புவியிலுள்ள பொல்லாத பாவத்தால் அழுந்திக்கிடவாமல் அலைந்தார் காண் அன்று

மந்திரியே புவியிலுள்ள பேர்கள் பொல்லாத பாவத்தால் நரகத்தில் அழுந்தி போகாமல் சிவனானவர் பிச்சை யெடுத்தார் பிள்ளாய் மந்திரியே

அன்றுமின்று மிந்த அரனாரே சேவித்து நன்றாக தேரை நடத்தனும் வாரீர்

சுவாமியிந்த புவியிலுள்ள பேர்களுக்கு பாவம் சேர வொட்டாமல் சிவனானவர் பிச்சையெடுத்து பாவத்தை நீக்கினார் என்றீரே அப்படி அவரையே தியானித்து தேரை நடத்துவோம் வாருமய்யா சுவாமி

வருமே அபகீர்த்தி மந்திரியே யிப்போத் தருமமல்ல கான் தன்யாசி தனக்கு

**வசனம்** - மந்திரியே அப்படிக்கு தேரை நடத்துறது நம்முடைய குலத்துக்கு அபகீர்த்தியே யல்லாமல் தர்மமல்ல காண் மந்திரியே

## வீதி விருத்தம் - பிலகிரி

பத்தியா நீரில் மூழ்கி மணிமலர் தும்பை சூடும்
அத்தனார் தன்னே நோக்கி அனுதினந் தொழுதி றைஞ்சி
புத்திர னாகை யாலும் புரந்தது யிதுக்கோ வென்று
யிந்தநாள் மனமெ லிந்து யின்றுமே புலம்ப லுந்தான்

## தரு – பிலகிரி

தீர்த்தங்களாடிச் சிவனே தொழுது வராமல் யிப்போ
வெந்துருவாகி மெலியவு மாகினேன் தியாகநாரே
பத்தியுடன் திருநீறுகள் பூசிவராமல் யிப்போ
புத்தி மெலிந்து புலம்பலு மாகினேன் தியாகனாரே
ஆசாரத் தோடே அவர்கள் பறித்து வராமல் பொல்லா
நீசனே போலே நானின்று தவிக்குறேன் தியாகனாரே
நந்தியின் முன்னே நமஸ்காரம் செய்து வராமல் யிப்போ
யென் தலைதன்னிலே யென்னா யெழுதினாய் தியாகனாரே

கோவில் வலம்வந்து கும்பிட்டுயானும் நில்லாமல் யென்னாவி
தளர்ந்து அழுகவுமாகிநேன் தியாகநாரே
தேவாரஞ் சொல்லி யெந்தன் சிந்தை தெளிந்து நில்லாமல்
யிப்போவாகா யெனக்கு
மலர்பதங் காட்டுவாய் தியாகநாரே
யேகமாக நின்று யிசுபரங் காட்டிய பொருளே
யிப்போவா கயிலாகிரி உண்மையாப் பாடினேன் தியாகநாரே

## வீதி விருத்தம் - முகாரி

ஆதியே அரனே யும்மை அண்டினேன் எவரு மில்லை
சோதினை பார்க்க வேண்டாஞ் சோர்ந்ததோ றாவின் கன்னால்
வாதினை பொறுக்க தில்லை மனமது மகிழ யிப்போ
நீதியா யெழுப்பு மய்யா நீலகண்டா போற்றி போற்றி

## தரு

சிவ சிவாயிந்தத் தீவினைகென் செய்வேன்
அரகரா யிந்த ஆபத்தே தீராய் (க)
மாதவங்களே செய்து முன்னாளிலே வந்துமே மனுநீதி
வயத்திலே
யெத்துத் திங்கள் செய்து பிறந்தேனோ அய்யனே
அரணாரே யென் செய்வேன் கொடுமையானதோ
கூறுவார்களே கொற்றவர் முன் சென்று
கடுமையானதோர் பாசத்தினா லென்னை
கட்டியே அந்த காலன் முன்னேகினால்
கடுமையானதோர் பாசத்தினாலென்னை
கட்டியே அந்த காலன் முன்னேகினால்
கடுமையானதோர் சூலத்தினால் குத்தி

சொல்லிடாமலே துன்பங்கள் தீரவே
அடுமையான அடியென்னை ஆளவீரே
அய்யனே திருவாரூரண்ணலே
யெங்குமே சென்றிரை யெடுக்காமல்
யேங்கியே பசுயென்முகம் பார்க்குதே
மங்கைபாகர் வசந்ததியாகரே மாற்றுவீரே நான் வல்வினை
நீக்கியே
சேவித்தோர்கள் முன்பாகத் தானேயென
சீவனை விட்டு செல்லுவோமென்றாவுங்
கோவித்தேஅந்த வேந்தனார் நீதிக்கிக்
குறையாகுதே யென்று கூசுதே யென்மனம்
பாவியென்றென்னை பார்க்குது யிப்பசு பதறுதே
யிந்தப் பாவத்துக் கென் செயிவேன்
காவிமாலையா சூடி முகாரியே கண்டு பாடினேன்
கலக்கந்தீருமே தேவார நாத நாம கிரிகை
மீள அருமை உமக்கே
ஆளாயி பிறரை வேண்டாதே
மீளாதீப் போல் உள்ளங்கனிந்து
முகத்தால் மிகவாடி ஆளாயிருக்கும்
அடியார் தங்கள் அல்லல் சொன்னால்
வாளாத்திருப்பீர் திருவாரூரில்
வாழ்ந்தும் போவீரே

## தரு

அரகரா மறையோதும் பொருளே பவக
ஞானக் கெபழுந்தே ஆதியே பரஞ்சோதியே

ஆ ஆ சிவனே நிறையமா வரமளிக்கும்
தருணத்திலுதவி செய்யும் நேசனே
பணிஉல்லாசனே ஆஆ

கன்னுவந்து மடிவதுவும் விண்ணுலகம்
புகழ்வதும் காரணு. . . .றி சாணு ஆஆ அடிக்கடி
சொல்லவேணுமோ துடிக்குதேயிந்த பசுவும்
அரகரா யெந்தன் பவகரா ஆஆ
பெற்ற புள்ளை மேலுனக்கு யித்தனை கோபமுண்டோ
பெருமையே யெந்தன் வறுமையே ஆஆ
தேடு ஞானத்துள் பொருளே வாடியே
தவிக்கவிட்டாயே செழுந்தனே வில்வகொழுந்தேனே ஆஆ

தேவர் தொழும் ஆரூரானே
யாவர் தொழுங் காரணனே
செம்மையோ உமக்கிது நன்மையோ ஆஆ
யித்தனை தும்ப படவும் செத்தே யாகிலும்
தயவு யில்லையே யித்தகம் வல்லையோ ஆஆ
பாதமதை செரசில் சூடி நாத நாமகிரிகை பாடி
பயந்தீரயிவந்து வாந்தாய் ஆஆ சிவனே

## வீதி விடங்கன் விருத்தம் - தோடி

தேறிய யெழுந்து மைந்தன் சேனைமந் திரியே பார்த்து
வாரிய ஓலை தன்னில் வரிசையா யிதுகள் ளெல்லாம்
சாரியா யெழுதி ராசன் சமூகத்துக் கனுப்ப யிப்போ
காரிய காரன் தன்னை கடுகவே அழைப்பிப் பாயே

**வசனம்** - வாரும் பிள்ளாய் மந்திரியே யிவ்விடத்தில் நடந்த விரத்தாந் தங்களை யெல்லாம் யென் தகப்பனாகிய மனுநீதி சோழ மகாராசானவர்க்கு ஓலை யெழுதி தூதர்கையில் நிரூபம் அனுப்பியும் புள்ளாய் மந்திரியே

## சபை விருத்தம் - தோடி

அழைத்தவன் எழுதும் ஓலை அங்கனே அனுப்பு முன்னே
தழைத்ததோர் பசுவெ ழுந்து கடினமா நகரம் புக்கி
தழைக்கவே கட்டி வைத்த தனிமணி தன்னை யிப்போ
வழைத்ததோர் கொம்பி னாலே வாதுட னடித்த தன்றே

**வசனம்** - யிந்த பிரகாரமாக வீதிவிடங்க சோழ மகாராசன் திருவாரூரிலே நடந்த விர்த்தாந்திரங்களை யெல்லாம் ஓலை யெழுதி தூதர் கையில் கொடுத்து அனுப்புகிறதுக்கு முன்னமே தன் கன்னை தேர் காலிலரைக்கக் கொடுத்து களைத்துக் கிடந்த பசுவானது எழுந்து தேர்காலின் வழியாமுக(ர்)ந்து பார்த்துக் கொண்டு மனுநீதி சோழ மகாராசாவின் பட்டணத்துக்குப் போய் அவர் சத்தியம் விளங்கும் படியா கட்டியிருக்கப்பட்ட ஆராய்ச்சி மணியை கொம்பினாலே வளைத்து அடித்து அம்மா வென்று அலறுகிற போது அந்த சத்தம் மனுநீதி சோழ மகாராசா கேட்டு மந்திரிகளோட சொல்லி புலம்பிதுற விதம் யெப்படி யென்றால்

## ராசா விருத்தம் - புன்னுகவராளி

அடித்ததோர் சத்தங் கேட்டு அலறியெ ழுந்த மன்னன்
துடித்துமே மேனி யெல்லாம் சோரவே யெழுந்து இருந்து
முடித்துதோ கால மென்று மொயித்துடந் துக்காத் தோடே
வடித்ததோர் மெழுகு போலே மன்னனும் வாட லுத்தான்

## தரு

யித்தனை நாளும் வெகு சத்திய முடனிருந்தோம் யென்ன காலம்

வந்துதோ சொல் மந்திரியே நமக்கேது காலம்

வந்துதோ மந்திரியே பக்தியுடன் தியாகரே

நித்தந் துதிகள் செய்த பலனது பலித்ததோ மந்திரியே

பாரண்டநாள் முதலாயி ஆராய்ச்சி மணி

சத்தம் பார்த்ததுண்டோ சொல்லும் மந்திரியே

காதால் கேட்டதுண்டோ சொல்லும் மந்திரியே

பேராசெயுல் கூறில் தீரா கவலை வந்தால் பிசகை அறிந்து கொள்ளும் மந்திரியே

ஆரிலோண்டு நாம் வாங்கி மாரி மூன்றும் பொழிய ஆண்டிருந்த நீதியே மந்திரியே

அரசாண்டிருந்த நீதியோ மந்திரியே

பாரிலுள்ள மன்னரும் நாரியர் நன்மையில்

போயழிந்திடும் பழிப்பாச்சே மந்திரியே

அன்னை தந்தை தவமோ யென்னுமோ யாமிப்போது

அறிந்து வருவோம் வாரும் மந்திரியே

அதைத் தெரிந்து வருவோம் வாரும் மந்திரியே

யென்னா துறை செய்தாலும் புன்னுகவராளி பாடி

யென்னும் ரெஷிக்க வேணும் மந்திரியே

## ராசா விருத்தம் - முகாரி

கட்டின நாளா யிந்த கனத்தது ஒரு மணியே

தானுந்தா டியேநா முமிந்த தரணியை ஆண்ட தில்லை

மாடில்லா சேனை சூழ மன்னரே அமைச்ச மாரே
அட்டியில் லாம லிப்போ அறிந்துநாம் வருவோம் வாரீர்

**வசனம்** - அகோ வாரும் பிள்ளாய் மந்திரியே யிதுவரைக்கும் நம்முடைய ஆராய்ச்சி மணியை ஒருவரும் அடித்ததுமில்லை.

அப்படியா ஆ அப்படியினாலே யென்ன காலமோ தெரியவில்லை நாம் போய் அறிந்து வருவோம் வாருங்கள் மந்திரிமார்களே

## உச்சா விருத்தம் - தன்யாசி

வேந்தனு மெழுந்து வாசல் வெளிதனில் வந்து பாராய்
சாந்தமா போற வர்கா ணுந்தனித்து மேஆ வுமணி
யேந்திய றங்கு றவிதம் யென்னுடைய அமைச்ச மாரே
பாந்தமா னிர்க்கு மந்த பசுவதை பார்த்தி டாயே

**வசனம்** - வாரும் பிள்ளாய் மந்திரியே யிவ்வட வானால் ஒருவரையும் காணோம் கோடி சூரிய பிரகாசம் போலே ஒரு பசு நிற்குதே யிதுதான் மணி அடிச்சது போலே காண்கிறது யிதுக்கு யென்ன யிடையூறு வந்துதோ தெரியவில்லை மந்திரியே

## சபை விருத்தம் - தோடி

நிண்டுமே அமைச்சர் தானும் நிகரில்லாது
கூத்தோடே யின்றுமே யிதர்க்கு வந்த
யிடர்தனை அறியேனென்று பற்றுள்ள
அமைச்சமாரே பகருவீர் என்றுரைக்க
சண்டைகளிட்டுக் கொண்டு சலுதியில்
தூதர் வந்தாரே இரு தூதர்கள் வந்தாரே

நிருபங் கொண்டு தூதர்கள் வந்தனரே
தெண்ட தெண்டமென்று திருநீறுஞ் சாத்திக் கொண்டு
வண்டல் கூச்சலிட்டு மார்பில் பதைக்கமிட்டு தூதர்கள்
வீதிவிடங்க ராசன் மேவியே ரவிவாதினை வார்த்தையை
மறைத்துக் கொண்டு
தூதர்கள் பசுவின் கன் மடிந்ததை பதறியே சொல்லாமல்
அவசரமாகவே அதட்டி உருட்டிக் கொண்டு
தூதர்கள் மந்திரி யெழுதிய வரிசை ஓலை தன்னை
விந்தையாக கைதனில் மிகவே புடித்துக் கொண்டு
தூதர்கள் வந்தாரே

**தூதர்கள் வசனம்** - திருவாரூரிலேயிருந்து நிரூபம் வந்திருக்குதய்யா

**ராசா வசனம்** - வாரும் புள்ளாய் மந்திரியே அந்த நிரூபத்தை பிரித்து வாசியும் புள்ளாய் மந்திரியே

## நிருபம் - தோடி

சத்திய மாகவே நித்திய வருங் காவேரி
தழைத்திடுஞ் சோழநாட்டை சதிருடஞ் செங்கோல்
நடத்திவரு மனுநீதி தார்வேந்தன் சமூகமதனில்
சர்குணமெனு மந்திரி சாஷ்டாங்க நமஸ்காரம்
தான் செய்து யெழுதும் நிருபம் தங்களுடைய
பாலகன் சிங்காரத் தேரேறி சதிரங்க சேனையுடனே
தானவர்கள் புடைசூழ வானவர்கள் மலர்போட
தயவாக வருகும் வழியில் சகுனமது தடை
கண்டு கவனமாய் நானின்று தடுத்திட
வார்த்தை யுரைத்தேன் தானுமவர்

கேளாமல் மான்மழு வேற்றிடுந் தியாகரை
கண்டு பணிய தடையொன்று சொல்லாதே
யிடையூறு வராது தங்கரத நடத்துமென்று
தானும் வரசொல்லிட மான்மழு உடையோனே
தன்மனதில் யானும் எண்ணி
சம்பிரதமாகவே கெம்பீரத்துடனே னுன் தலைவர்களானவர்
சூழ தவில் முரசு யெக்காள பேரிகை அதிர்ந்திட
தம்பூரா சிறந்து வரவே தவண்டையுடன்
மல்லாரி கிண்ணேரி வாசிக்க
தய்யலர்கள் நடமாடிட சகல
லோகம் குலுங்க மலை நாயகி வளருந்தானுரூர்
வீதி வரவே - தடையொன்று நில்லாமல்
படையென்று யெண்ணாமல்
தங்க நிறமான செங்கன் படபடெண் டுருளையில்
திடுதிடென் டோடியே பண்டிடனரைந்து போச்சு
பசுவது தேடியே கதறியே நின்றிட பாலகனுமதை யறிந்து
பதறியே கிலேசித்து அலறியே மைந்தனும்
பண்புடனுரைத்த மொழியால்
பண்ணும் வகை யெங்களுக்கின்ன தென்றறிகிலோம்
பசுவின் கன் பழிகள் தீர பாதையை காண்கிலோம்
யேதேனுமறிகிலோம் பதறுது யென்மனது மிகவே
பாங்குடன் தங்களுக் கெழுது நேரம் அடியேனும்
பசுவின் கன் நிருபம் யிதுவே

### உச்சா விருத்தம் - காபி

பரவிய தூதர் வந்து பகர்ந்துமே உரைக்கும் போது
அரகரா சிவனே யென்று ஆனதோர் காதை மூடி

இறையவ நெங்க ளுக்கு யிப்படி யெழுதி னானோ
வரைபெருந் தாசாத் தோடே மன்னனும் வாட லுத்தான்

## தரு - காபி

யென்றன் மீதில் கோபமேதய்யா ஓதியாகய்யா சந்தேகம்
யென்மேல் வந்ததேய்யா - வந்து தூதர் சொன்ன
வார்த்தையை ஓ தியாகய்யா
யிந்தவிதிகள் வந்ததய்யா சொந்தமென் றுன்னை நம்பினேனய்யா
ஓதியாகய்யா
யெந்தன் மனமுங்கலங்கவோ செய்தாய் கண்ணுமடிவதேதய்யா
ஓதியாகய்யா
யிந்தக் காப்பி பாடவோ செய்தாய் முகாரி

## ராசா விருத்தம்

ரூயதனால் வந்த தய்யே யெந்தனுக்கு யிந்தப் பாவம்
மாதவம் அளித்த பாலன் வன்மையாய் எழுதி னாரே
காதிநில் கொப்பு அணியு காரிழை உமையாள் பங்கர்
சோதினை தானோ யிந்த துன்பமும் அறிகி லேனே

**வசனம்** - அகோ வாரும் பிள்ளாய் மந்திரிமார்களே அனேக நாளாய் ராக்ஷிய பரிபாலனம் பண்ணிக் கொண்டு வருகுற நமக்கு ஒரு பசுவின் கன்னினாலேயிப்பேர்ப்பட்ட நிந்தனையான வார்த்தை வந்ததே யிதற்கென்ன செய்யிவோம் பிள்ளாய் மந்திரியே

## மந்திரி விருத்தம் - தோடி

ராசனு மனது நொந்து நாடியே புலம்பும் போது
வாசமா யிருக்கு மந்த மந்திரி அனைவர் கூடி
மாசில்லா பசும றித்து மறுபசு பொன்னால் செய்து

நேசமாய் மறையோர்க் கீய நீதியில் யிருக்கு தய்யா

**வசனம்** - வாருங்களய்யா சுவாமி யிந்த பசுவின் கன் இறந்து போனதற்கு தேவரீர் விசனப் படவேண்டாம். தங்கத்தினாலே பசு செய்து நம்முடைய இஷ்ட தெய்வமாயிருக்கா நின்ற தியாகராசரை பூசை பண்ணி பிராமணாளுக்கு கொடுத்தால் அந்தப் பாவம் தீருமென்று நீதி சாஸ்திரத்தில் சொல்லுதய்யா சுவாமி

## தரு - தோடி

நீதி நீதி யென்றுரைத்தீர் மந்திரியே அங்கு
நிற்கும் ஆவுக் கென்னமாச்சு மந்திரியே

**வசனம்** - மந்திரியே தங்கத்தினாலே பசுவு செய்து அநேகம் பிராமணாளுக்கு கொடுத்தால் அந்தப் பாவம் தீருமென்று சாஸ்த்திரஞ் சொல்ல வந்தயே அதோ கன்னே அரைக்கக் கொடுத்துவிட்டு புலம்பி கொண்டிருக்குற பசுவுக்கு யென்ன செய்குறது சொல்லும் பிள்ளாய் மந்திரியே

## தரு

ஆச்சுதய்யா உலகமெங்கும் சாஸ்த்திரங்களை நீரும்
வச்சபடி செய்ய வேண்டாம் மன்னவரே

**வசனம்** - சுவாமி ஒலக நீதிப் பிரகாரம் தர்ம சாஸ்திரத்தை தள்ளாமல் நடத்த வேணுமய்யா சுவாமி

## ராச தரு

வேணுமென்றேரு வரதனே கொன்னு போட்டு
பணந்தோணவே மறையோர்க் கீந்தால் துலையுமோ பாவம்

**வசனம்** - மந்திரி வேணுமென்று ஒருவனை அவதான்மா கொன்னு போட்டு பிராமணாளுக்கு அநேக

திரவியத்தைக் கொடுத்தால் அவனைக் கொன்ன பாவந் துலையுமா சொல்லும் புள்ளாய் மந்திரியே

## தரு

துலையுமென்ற பெரியோர்கள் சொல்லிய வேதம் நீதி
கலைகளென்ன பொய்யாகுமே வேந்தனாரே

**வசனம்** - தாங்களப்படி சொன்னால் பெரியோர்கள் சொன்ன வேத சாஸ்திரம் பொய்யாப் போகாது மகாராசனே

## தரு

ஆகமத்திள்ளபடி செய்திடாமல் முன்னே
திரேகந்தன்னே புருவுக்கீய செப்புவானே

**வசனம்** - மந்திரியே சிபிச் சக்கரவர்த்தியானவன் ஒரு புறாவுக்காக தன்னுடைய திரேகத்தை சதை சதையாக அறுத்துக் கொடுத்து பிராணனே விட்டாரல்லவா அப்போது யிந்த சாஸ்திரத்தே தள்ளியே நடந்தார் சொல்லும் பிள்ளாய் மந்திரியே

## தரு

வானவர் முனிவர் செய்த வன்மை தானோ
தனந்தோணவே நாம் செய்தோமானால் துலையுமே பாவம்

**வசனம்** - தேவர்கள் முனிவருக்கு யெப்பேர்ப்பட்ட பாவம் வந்தாலும் தருமசாஸ்த்திரப்படி பிறாமணாளுக்கு தானம் கொடுத்தால் அந்தப் பாவம் அவர்களை அணுக மாட்டாதய்யா சுவாமி

## தரு

பாவம் வருஞ் சாஸ்த்திரங்கள் பார்க்க பார்க்க அந்த
கோவதைக்கி யென்ன வழி கூறுங்காணும்

**வசனம்** - பாவமாகிய தர்ம சாஸ்த்திரம் யிருக்கட்டும் யிந்தப் பசுவுக்கு தருகிறதுக்கு யென்ன செய்வேன் பிள்ளாய் மந்திரியே

## தரு

கூறிய முறைப் படிக்கி யென்னா செய்து நான்
தேறியே தோடி பாடினால் தீருமே பாவம்

**வசனம்** - தர்ம சாஸ்த்திரப் படிக்கி பொன்னினாலே பசுவு செய்து அநேக பிறாமணாளுக்கு தானங் கொடுத்தால் சகலபாவமும் சகலபீடையும் நிவர்த்தியாகுதென்று சொல்லுதய்யா சுவாமி

## ராசா விருத்தம் - தோடி

பொன்னனினால் பசுவு செய்து போதவே மறையோர்க் கீந்தால்
யென்னபா தகஞ்செய் தாலும் யெதுமென்று ரைத்தீ ரிப்போ
தன்னுடன் கன்னே போக்கி தனித்துமே நிற்கும் ஆவுக்
குயென்ன தாச்சு யிப்போ யின்னதென் றியம்பு வீரே

**வசனம்** - அகோ வாரும் பிள்ளாய் மந்திரியே ஒரு பிறாமணாளைக் கொன்னால் கோடி ஸ்திரியை கொன்ன தோழ(ச)ம அப்படி கோடி ஸ்திரியை கொன்னால் ஒரு சிசுவை கொன்ன தோழ(ச)ம் அப்படி கோடி சிசுவை கொன்னால் ஒருபசுவை கொன்ன தோழ(ச)மான படியினாலே யிதற்கென்ன செய்யப் போறேன் பிள்ளாய் மந்திரிமார்களே

## மந்திரி விருத்தம் - முகாரி

கொத்தவா நீரு மிந்த கொடுமைகள் கூற வேண்டாஞ்
செத்தோர்கன் தனக்கு செய்வ துகரு மமங்கே நீரே

அத்தனார் தம்மை போத்தி ஆவினு டையகன் பொன்னால்
பத்தியா மறையோர்க் கீந்தால் பர்வமு மணுகி டாதே

**வசனம்** - அகோ வாருங்களய்யா சுவாமி நான் சொல்லுகிறதை தள்ளாமல் அனேக திரவியங்களை பிறாமணாளுக்கு தானங் கொடுத்தால் யிந்த பசுவின் கன்வதை நம்மலெ சேரமாட்டாதய்யா சுவாமி

## ராசாபத்தியம் - ஆனந்தபைரவி

யிந்திரனொரு முனிக்கிடரது செய்யவே யேகமாயடியுடன் யோனியானான்
சந்திரன் ஒருமுனிசாபங்கள் தன்னினால் தன்கலை மாறியே தாழ்வதானான்
விந்தை சேர்காலனும் மார்க்கண்ட முனியினால் விழுந்துமே

புவிதனில் மிகவும் மாண்டான்
சுந்தரமானதோர் கவுரவர் குலமெல்லாம் தோழ(ச)மே செய்திட நாசமானார்
அந்தமுள்ள மறையவர் தங்களுக்கும்
விந்தையா ஆவின் கண்முனிவருக்கும்
யிந்த விதமிடர் செயிது மனது நொந்தால்
சந்தேகமென்ன வினை சாத்தொன்னுதே

**வசனம்** - அகோ வாரும் பிள்ளாய் மந்திரியே தேவர்களுக்கெல்லாம் தேவனாயிருக்கப்பட்ட தேவேந்திர மகாராசாவானவர் கௌதம ரிஷி பெண்சாதி அகலிகை யோனிக்கு ஆசைப்பட்டு அவர் தேகமெல்லாம் யோனியானார். சந்திர பகவானானவர் துருமுனி சாபத்தினால் தன்னுடைய கலைகளெல்லாம் மாறி குறைத்து போனான். யெமதர்ம ராசாவானவர் மார்க்கண்ட

மகரிஷியினால் பரமேஸ்வரன் காலிலுதைப்பட்டு பூமியில் அழுந்தி மரணமடைந்தார். திரியோதனாதிகள் துரோபதையை துயிலுரிந்த படியினாலே அவர்கள் குலங்களெல்லாம் நாசமாய் மடிந்து விட்டார்கள். அப்படிபோலே பிறாமணாள், ஸ்திரி, சிசு, பசு இது முதலான பேர்களுக்கு யாதொரு யிடர்கள் செய்தோமானால் அந்த தோழ(ச)த்தை நிவர்த்தி செய்து கொள்ள முடியாது ஆன படியினாலே பசுவின் கன் பழிக்காக பாலகனாகிய வீதிவிடங்கனை தேர்காலிலிட்டு அரைக்குறது தர்மந்தான் பிள்ளாய் மந்திரியே

## ராசாவிருத்தம் - யெருக்கலை காம்போதி

கனியுடன் மெந்தன் கன்னி யேசொல்லக் கேளாய்
அனிதமாய் பாலன் தானும் ஆவின்கன் தன்னே கொன்னு
யினிதாய்நா மிருந்தால் நமது வம்(ச)மி சத்துக் கெல்லாம்
புனிதமாய் வசைக ளாகும் பூவையே சொல்லி டாயே

**வசனம்** - அகோ வாரும் பெண்ணே திருமனுதேவி நம்முடைய பாலகனாகிய வீதிவிடங்கன் தியாகராசரே தெரிசனம் பண்ணப் போனயிடத்தில் ஒரு பசுவின் கன்னே தேர்காலில் அரைத்து கொன்னு போட்டானும் ஆனபடியினாலே நம்முடைய சூரிய வமுசத்துக்கு நிசிதமான வார்த்தை வந்து மூண்டுதே யிதற்கென்னா செய்வோம் பெண்ணே

## திருமனுதேவி விருத்தம் - முகாரி

தும்பைமா மதியும் கொன்றை சூடிய ஆரூர் தியாகர்
யின்பமாய் யெங்க ளுக்கு யிணையில்லா பால னீந்து
கொம்பில்லா கொடிகள் போலே குலாவியே தவிக்க விட்டீர்

சம்பிரமே உமக்கு ஆரூர் தியாகரே சரண மய்யா

யென்ன செய்யிவேன் யேது செய்யிவேன் தியாகனாரே நான்

## தரு - முகாரி

யென்னா செய்வேன் தியாகநாரே நானிவ் வசைக்கி
யென்னா செய்வேன் தியாகனாரே யிவ் வசைக்கி
யென்னா செய்வேன் தியாகனாரே
கன்னியர்க்கு சாக்ஷி சொன்னீர் தியாகனாரே
மனங்கலங்கியே தவிக்குறேனே தியாகனாரே
உம்மையன்றி வேறுமில்லை தியாகனாரே
சுந்தரர்க்கா தூது சென்றீர் தியாகனாரே
துயரமா முகாரி பாடி துன்பத்தே தீரும்

## ராசாவிருத்தம் - ஆனந்தபைரவி

மங்கையும் புலம்பும் போது மனமெலிந் தரசன் தானும்
கண்களில் நீர்கள் சோர காரிழை தன்னைப் பார்த்து
அங்கையோ ராவின் கன்னும் அவனையே பழியே செய்ய
திங்கள்தன் சடையா ரூர்தி யாககேசர் கிருபை தானோ

**வசனம்** - வாரும் பெண்ணே திருமனுதேவி யிந்த பசுவின் கன்னே கொன்ன பாவியாகிய வீதிவிடங்கனெ தெில் பலி கொடுக்கிறதே தர்மமாகுமடி பெண்ணே யென்ன வார்த்தை சொல்ல வந்தீர்

## திருமனுதேவி தரு - ஆனந்தபைரவி

யென்னவார்த்தே நீர் சொல்ல வந்தீர் பிராணநாதா யெந்தன்
சிந்தை

புண்ணாநொந்து வாடுதே நான் யென்னா செய்வேன் யென்னா
செய்வேன்

யென்னா செய்வோமென்றால் மன்னர் பேச வசையாச்சே

அந்தவர்க்கு பிறதானவர்க்கும் பழிப்பாச்சே

ஆச்சென்றால் புவி ஆள்வதற் குதவியா ஆறுபோச்சுதோ

சூரியகுலமுறை போய் விட்டுதோ தான் விட்டுதோ தான்

விட்டுதோவென்றால் விதி வசத்தே தள்ளலாமோ

அட்டி சொல்லாதிரு மனந்தேறு

கெட்டியா மனந்தேறு

தேறுவதற்கு ஏததுசித்தம் வாடுதே சுவாமி

பிரம ஆயனா ரெந்தனையு ஆசையுண்டோ

குணநேசா விசுவாசா (ஆசை)

ஞாயமோ நீர் செய்த உபாயமோ

## ஆனந்தபைரவி

பாடிலென்னா ரோசம் பசுங்கன் மோசமான பின்னும்

தேச மாண்டால் வெகு தோழ(ச)ம் வெகு தோழ(ச)ம்

## திருமனுதேவி விருத்தம் - காம்போதி

சத்தியந் தவறா தமன்னன் தடுத்துமே உரைக்கும் போது

சித்தமுங் கலங்கி நொந்து சேல்விழி நீர்கள் சோர

புத்திடங் கொண்ட ஆரூர் புனிதனே யென்று சொல்லி

யிந்தனால் மனமெ லிந்து யிந்துமே புலம்ப லுத்தாள்

## தரு - காம்போதி

ஞாயமோ நீர்செய்த உபாயமோ நீர்கள்

விரம ஆயநெழுதிய மாயமோ நான்காணேன்

நேயனே கமலைதன் நாயனே அருள்புரி
துய்யனே ஆரூர் தியாகரே
யிப்படி யேசவோ மங்கையர்கள் பேசவோ
மன்னர் கூசவோ யென்மனம் நேசனே
யிப்படி தவஞ் செய்த பாசமோ மகனோட மோசமோ
யென்னுட பூசாபலன் யிதோ யில்லையோ
யின்னம் மனம் வல்லையோ மகன்தனே கொல்லலு
யென் மனத்தெள்ள வில்லையோ
காலமோ யிதென்னோட காலமோ
சிறுபாலன் தனே கொல்ல சிலமுடனாளும் கோலமோ
நீர்செய்த சாலமோ தில்லை ஆலத்தையுண்டருள் நீலகண்ட
பரஆதியே, சிதம்பர சோதியே
பாதி மதியணி நீதி பரபிரம தெய்வமே
யெங்கள் பங்கு தெய்வமே
வையகமெங்கு நய்யவே
யேசுவாரய்யனே திருவாரூர் மெய்யனே
ஆ தெய்வமே, துய்யனே
காம்போதி பாடியே போத்தினேன்

## ராசா விருத்தம் - ஆனந்தபைரவி

வேந்தனும் மனமெ லிந்து மெல்லியாள் தன்னே பாத்து
நேந்திடா பாவம் வந்தால் நீங்கிடா துன்பம் போமோ
ஏந்திடும் கொங்கை யாளே யெனதுநற் குலங்க ளெல்லாம்
பாந்தமா வசை களாகும் பாலகன் ஆனா லென்ன

**வசனம்** - வாரும் பெண்ணே திருமனுதேவி நம்முடைய சூரியவம்மிசந் துலங்க வந்த பாலகனாகிய வீதிவிடங்கனெ

பசுவின் கன் பழிக்கி தேர்காலிட்டு அரைப்பதே தர்மமாகுமடி பெண்ணே

## தரு - ஆனந்தபைரவி

பசுவின் கன் தனக்காக பாலனை பழிசெய்ய
கூசுதே யெந்தன் மனம் கொத்தவரே சுவாமி
ஒன்றாக உலகத்தோர் ஒரு பசுவின் கன்னுக்கு
நன்றாய ரைப்பதுவும் ஞாயமடி பெண்ணே
பாராள நமக்கிந்தப் பாலகனில்லாமலே
ஆராண்டிருப்பார்களோ ஐயோ கோவேந்தனாரே
கோவதையை கொன்னதற்கு குமாரனெ தேர் காலிட்டு
தாவியரைப்பதுவுந் தரமடி பெண்ணே
அண்ணல் தியாகேசர் மேலே ஆனந்த பயிரவியே
அன்பாக பாடினேன் அய்யகோ வேந்தனாரே

## ராசா விருத்தம் - காபி

வண்ணமா மொழிகள் பேசும் மங்கையே சொல்லக் கேளாய்
அன்னிய ரானா லென்ன அரிவைய ரானா லென்ன
பின்னைய ரானா லென்ன பிள்ளைக ளானா லென்ன
கொன்னவன் தன்னெ யிப்போ கொல்வது தர்மம் தானே

**வசனம்** - வாரும் பெண்ணே திருமனுதேவி தாயாரானாலும் தகப்பனாரானாலும் பெண்ஞ்சாதியானாலும் பிள்ளைகளானாலும்

பெந்துசனங்களானாலும் ஒருவர்க்கு யிடர் வரும்படி செய்தவனே கொல்லுவது தர்மமாகுமடி பெண்ணே

யிந்த விதி கொன்னு நான் செய்வேன் திருவாரூர் நாதா

## தரு - காபி

யிந்த விதிக்கென்னு நான் செய்வேன் திருவாரூர் நாதா
யிந்தவிதிக் கென்னா னான் செய்வேன்
யிந்தவிதிக் கென்னா செய்வேன்
அந்தமுள்ள பாலகன் தன்னே
விந்தையா கொல்லவுமாச்சுதே திருவாரூர் நாதா
காதலான சீதை மாதுகாரிய ராமர்க்கு முன்னே நீதமாய்
மடிந்துவிட்டாளே

அவளல்லோ பதி
அல்லும் பகலுன்னே தேடி
தொல் வினைகள் தானும் ஓடி
நல்வினைகள் எனக்குமிது ஓ திருவாரூர் நாதா
சாதகமா யென் தலையில் தானே யெழுதினதந்த
வேதனே நான் யென்ன செய்வேன்

## விருத்தம் - முகாரி

வன்மையா உரைக்கும் மெந்தன் மந்திரி மாரே
செம்மையா ஆவும் வந்து திறமுடன் மணிய டித்து
உண்மையும் உண்டோ நீரும் உலகத்தில் கண்ட துண்டோ
தின்மையாய் செய்த பேர்க்கு செய்வது தீர்க்கந் தானே

**வசனம்** - வாரும் பிள்ளாய் மந்திரிமார்களே யிது வரையில் யிந்த ஆராக்ஷி மணி அடிபட்டதுண்டோ அப்பேர்ப்பட்ட மணி அடிபட்ட படியினாலே பசுவின் கன்னே கொன்னவனை கொல்லுகிறது தர்மம்தான் புள்ளாய்

**வசனம்** - வாருங்களய்யா சுவாமி தாங்கள் தர்ம சாஸ்திர பிரகாரம் சொல்லுவதை தேவரீர் மனதில் யெண்ணாமல்

தள்ளி நடப்பது தர்மமல்ல அய்யா சுவாமி

## விருத்தம் - தோடி

வந்ததோ களைக ளுக்கெல் லாம்வகுத் ததுஎன்
சந்ததிப் படாமல் சாது மாதிரி யேநீ கேளாய்
விந்தையாய் மலரும் வீதி விடங்கனை தேர்க்கா லிட்டு
அந்தமாங் கன்னு செத்த விடத்திலே அரைத்து வாராய்

**வசனம்** - அகோ வாரும் பிள்ளா(ய்) மந்திரியே நான் சொல்வதை தள்ளி தர்ம சாஸ்திரத்தை யெனக்கு புகட்டிய தெல்லா(ம்) சரி யிப்போது நீ யாதொரு தடை சொல்லாமல் திருவாரூருக்குப் போய் பசுவின் கன் பழிக்கு பாலகனாகிய வீதிவிடங்கனே தேர்க்காலிட்டு அரைத்து வாரும் புள்ளாய் மந்திரியே

அப்படியே மகா பாக்கியமய்யா சுவாமி

## மந்திரி குதிரை ஏறுகிற சபை விருத்தம் - கல்யாணி

சொன்னதோர் மொழியே கேட்டு துடித்துமே அலறி மந்திரி
யென்னதான் செய்வோ மென்று யேங்கியே மயங்கி வாறு
பன்னகம் தரித்து வாரூர் பாதையில் செல்வோ மென்று
வன்னமாம் பரியி லேறி மந்திரி சவாரி வாரான்

**வசனம்** - யிந்த பிரகாரமாக மகாராசா சொன்ன வார்த்தையை கேட்டு வெகு கிலேசத்துடனே குதிரையேறி திருவாரூருக்கு போகுற விதம் யெப்படியென்றால்

## தரு - கல்யாணி

சாரி வாரான் மதிமந்திரி சாரி வாரான்
கவனவாம்பரி யேறியே ஒரு காசுதாரியுங் கூடவே

விமலத்திருபுறநகர் செயித்தவர் நிதம்விளங்கும்நகர்தனை நாடியே
(சாரி)

பசுவின்கன் பழிக்காக தனதுடன் பாலலே
பழிகொடுப்ப துநன்று உசிதமாமென்று
அரசன் விழைந்திட்ட உண்மையே மனதெண்ணியே
(சாரி)

வண்ணமாமணி தேரின் காலிலே மைந்தனே தள்ளி
விந்தையாகவே
யென்னவிதம் மறைத்திடுவோ மென்று மெண்ணியே மனம்
துண்ணியே
(சாரி)

ராசர் ராசர்கள் பணியும் மனுநீதிராசன் முறைதவறாத மந்திரி
தேசம்புகழ்கலியாணி பாடியே தினமும்வளர் திருவாரூர் நாடியே
(சாரி)

## மந்திரி விருத்தம் - நாதநாம கிரிகை

மன்னனும் உரைத்த போது மந்திரி மனது நொந்து
கண்ணி(ல்)நீர் தழும்ப மெத்த கரையது காணா சோபம்
தன்னையே கொண்டு மெத்த வித்தவன்மு கமும்வே றாயி
என்னதான் செய்வே னென்று யெழுந்துமே புலம்ப லுத்தான்

## தரு - நாதநாம கிரிகை

வேந்தனும்மனமெலிந்து வெகுண்டுமே சொன்னாரய்யோ சிவனே
பரமசிவனே
பாந்தமா உரைத்திடவும் பார்பார்கள் இல்லை அய்யோ சிவனே
பரமசிவனே
சந்த உலகநீதி சார்த்தினார்க ளில்லை அய்யோ சிவனே

யேந்திய கரங்குவித்து யேந்திழை அழுததற்கு சிவனே
கோவித்து ராசனும் கொல்லுமென்று தானுரைத்தார் சிவனே
கொல்லுவது யெப்படி நான் கொழந்தை யெதிரே சென்று சிவனே
புவியிலுள்ளோர்களெல்லாம் புள்ளையைக் கொன்னா னென்பார் சிவனே
தேரைவிட்டு யென்ன வென்று சிதற அரைப்பனைய்யோ சிவனே
வடிவுள்ள பாலகனே வாகாகக் கொல்வதிலும் சிவனே
கடுகாக யென்னுயிரை மாய்த்திடுகிறேன் சிவனே
நாதநாம கிரியை பாடி நலமாக யாண் மாண்டு போறேன் சிவனே பரமசிவனே

## மந்திரி விருத்தம் - முகாரி

புலம்பியே அமைச்சன் தானும் பூமியில் விழுந்து கண்ணால்
சலமதுக ரையா சேட தவித்தவன்மு கமும்வே றாயி
நலமுடன் நிறைந்தி டாமல் நல்லதோர் வாளை வாங்கி
பலன்நமக் கிதுதா னென்று பதறியே மாயந்திட் டானே

## வீதிவிடங்கன் விருத்தம் - யெதுகுல காம்போதி

அங்கேதான் நின்ற ஆவும் அமைச்சனும் அருகில் வந்து
தன்கைவா ளினாலே தன்னு டைய உயிரைப் போக
பங்கமும் வந்து தென்று பதறியே யெழுந்து பாலன்
கண்களில் நீர்கள் சோர கதறியே புலம்ப லுத்தான்

## தரு - யெதுகுல காம்போதி

யென்னா செய்வேனேது செய்வேனடா யென்வரசே மந்திரியே
பின்னே சேரும் தன் மந்திரிகள்
ஒன்னே போலொருத்தன் வருவானோ தான்
ஒன்னயப்பாத்து நாடான்ட ராசன் உலகமெல்லாம் ஆண்டிருந்தார்

தன்னை யினிதார் யிந்த யெங்கள் சகலகலை வல்லவனே
பொறுமையுட னரசாள யெங்கள் பூபால வேந்தர்க்கு
மர்மமெல்லாம் நீருரைத்தீர்
மனுநீதியென்றே பெயர் நாமம் குருவுக்காக உயிரிழந்தார்
யெங்கள் கொத்தவனார் முன்னாலே மருவிவரும் பசுவதற்கு
பழியளிக்க யெண்ணியிருந்தேன்
பரியேறி நீ வரவே நான் பாத்து மன மகிழ்ந்திருந்தேன்
அருகில் வருமுன்னாலே பாவி ஆருயிரை மாய்த்து விட்டாய்
கன்பழிக்கு நான் கொடுக்க உயிர் காத்திருந்தேன் சிலகாலம்
ஒன்பழிக்கி யார் கொடுப்பார் யெங்கள்
உத்தமனார் கொடுக்க வேணும்

## வீதி விருத்தம் - தோடி

கன்னது மடிந்த தற்கு கலங்கியே யிருக்கும் போது
மன்னன்மந் திரியு வந்து மாண்டதற்கு யென்னு செய்வேன்
யென்னையு படைத்த யீசா யிப்படித் தவிக்க விட்டீர்
அண்ணலே அரனே என்று அழுதுமே புலம்ப லுத்தான்

## தரு - தோடி

அய்யனே திருவாரூர் வாசனே அன்யாயமதாய் மந்திரி வாழ்வு
துய்யனே ஒம்முடைய சோதினை தானோ
நய்யுதய்யோ விது ஞாயமோ காணேன் (அய்யனே)
ஆவின்கன் தாவி அரைப்படப்போக
பாவி மந்திரி பழி பாவத்துக்காளானோன் (அய்யனே)
கஷ்டப் படாமலே காக்கனுமய்யா
இஷ்ட தெய்வம் செகதீசா கயிலாசா (அய்யனே)

ஒந்தனைத் தேடி வந்தே நானோடி
விந்தையாய்த் தோடி விளம்பினேன் பாடி

(அய்யனே)

## வீதி விடங்கன் விருத்தம் - முகாரி

யிப்படிப் புலம்பி மைந்தன் யிணையில்லா துக்கத் தோடே
தப்பிதம் வந்த தென்று சாரணர் தன்னே பார்த்து
காப்பினை இல்லா வேந்தன் கருத்தினில் அறிய மந்திரி
கொப்பென மடிந்தா னென்றே கூறுவீர் கொத்த வர்க்கே

**வசனம்** - அகோ வாரும் புள்ளாய் மந்திரியே தூதரிடத்தில் சொல்லி நம்மிடத்தில் வந்த மந்திரி தன் கை வாளினாலே தான் குத்திக் கொண்டு யிறந்து போனாரென்று யென் தகப்பனாராகிய மனுநீதி சோழ மகாராசாவுக்கு அறியப்படுத்தி வரச்சொல்லும் புள்ளாய் மந்திரியே

## தூதர் விருத்தம்

கடுகிட ஓடிச் சென்று கனத்ததோ அரசன் முன்னே
அடியதைச் சரணஞ் செய்து ஆனதோர் பாலன் தன்னே
வடிவுடன் கொல்ல வந்த மந்திரி யெறந்தான் யென்று
யிடியது யிடித்தாற் போலே யியம்பினார் தூதர் தாமே

**வசனம்** - அகோ சரணம் சரணமய்யா சுவாமி தங்களுடைய பாலகனைக் கொல்ல வந்த மந்திரி அவரைக் கொல்ல மாட்டாமல் தன்கை வாளினாலே குத்திக் கொண்டு யெறந்து போனாரய்யா சுவாமி

## ராசாவிருத்தம் - நீலாம்பரி

சாரணர் உரைத்த போது சடுக்கென யெழுந்து மன்னன்
காரண விதங்கள் முன்பு கருத்தினில் அறியப் போவார்

அணிமுலை யாளா னமனு நீதிவரை மங்கை யர்க்கு
தேரணி அரச ருக்கும் செப்பியே புலம்ப லுத்தான்

## தரு - நீலாம்பரி

தர்மம் மனுநீதியெல்லாம் சாஸ்திர விதங்களோடே பெருமை யுடனோதும்
யெங்கள் புனிதமா மறையவரே
அருமையுள்ள பாலன் தன்னே
அரைத்து வாவென்று சொன்னோம்
வறுமையுடன் ஓதுமெங்கள் மந்திரி இறந்தானய்யோ
புள்ளையில்லா நாமிருந்து பூமிவலஞ் செய்தோம் முன்னாலே
வள்ளல் நமக்கிந்த பாலன் மாயவே பசுவின் கன்னே
துள்ளவே அரைத்தபழி சுமந்துதே நான் யென்னா செய்வேன்
யெத்திசையும் வசையாக யென் மந்திரியே மக்களாச்சே
பத்தினி பரத்தையர் பழுதுபட சொன்னோமோ தான் அண்ணலாரே
நீலாம்பரி அபயமிட்டு பாடினேன்

## ராசா விருத்தம் - முகாரி

வேந்தனும் மனமெ லிந்து மெல்லியாள் தன்னே பாத்து
ஆந்ததோர் பாலன் தன்னே அமைச்சனும் கொன்னி டாமல்
சாந்தமா அவனு மாங்கே தன்னுயிர் யிழந்த தற்கு
பாந்தமா பழிய ளிக்க பாவையே போய்நான் வாரேன்

**வசனம்** - வாரும் பெண்ணே திருமனுதேவி பசுவின் கன் பழிக்கிற நம்முடைய குமாரனை தேர்க்காலிட்டி அரைத்து வரச் சொல்லி மந்திரியை அனுப்பினோம் அவனுமந்த பாலகனைக் கொல்ல மாட்டாமல் தன் கை வாளினாலே குத்திக் கொண்டு ஆனபடியால் பசுவின் கன்

பழிக்கி குமாரனை தேர்க் காலிட்டு அரைத்து விடுகிறேன்.
மந்திரி பழிக்கி நான் பலி கொடுத்து வருகிறேன்டி பெண்ணே

## தேவி விருத்தம்

கோதையும் புலம்பி வாடி கொத்தவன் முகத்தைப் பாத்து
யேதுநான் செய்வே னென்று யிருகரமும் குவித்து தானும்
வாதினை பொறுக்கு தில்லை மன்னனே யெந்த னுக்கு
ஆதர வாக நீரும் அன்புடன் உரைசெய் வீரே

**வசனம்** - வாருங்களய்யா சுவாமி அடியாள் திருவாரூருக்குப் போய் நம்முடைய ஏக புத்திரனாகிய வீதி விடங்கனை தேர்க்காலிட்டு அரைத்து விடுகிறேன். மந்திரி பழிக்கி நான் பழி கொடுத்து விடுகிறேன் தேவரீர் யிருந்து ராக்ஷிய பரிபாலனம் பண்ணிக் கொண்டிருங்களய்யா சுவாமி
மாதே யென்னடி வாது பேசறாய்

## தரு - காப்பி

மாதே யென்னடி வாது பேசறாய் அடி பொன்னே
கண்ணே நீதமல்லடி நீயு மாய்வது
ஆகமங்களில் உலகத்தோர்களும் யென் சுவாமினாத
தாகமாக பொன் தாலி கட்டினார்
கட்டி நல்லதோர் மானிடர்க்குமே அடி பெண்ணே கண்ணே
இஷ்டமாக யிருந்து வாழ்கவும்
வாழ்வை யெண்ணியே மங்கைமார்களும் சுவாமினாத
ஊழிகாலமோ உண்மை யென்பவர்
அங்கே செத்தோராவின் கன்னுக்கு அடி பெண்ணே கண்ணே
துங்க நானிதே பாலனிய்யுரேன்
யிய்ய யீசனும் யெழுதினார்களோ யென் சுவாமினாத

மாயவுங்கன்னு வகையிருக்குமே
மந்திரி மிகவுமாண்டதால் அடிபெண்ணே கண்ணே
யிக்ஷணம் பழியானுமாயுறேன்
குலாவு மாந்தர்கள் கொண்ட பெண்களை யென் சுவாமிநாதா
பலவிதஞ் செய்தால் பாவமில்லை காண்
பாவம் வந்தல்லோ பழியழிக்கலு அடி பெண்ணே கண்ணே
தாபமாய் காப்பி தானும் பாடினேன்

## தேவி விருத்தம் - ஆனந்தபைரவி

மெய்யுள்ள பிரம தேவன் வேந்தனுக் களித்த வாருங்
கையுள்ள விதி வசத்தால் காரணன் நேந்து தேதான்
பையுள்ள கணவ ரில்லா பரத்தையர் யென்று பேச
வய்யகந் தனில்பி றந்து வகைவகை மோச மானேன்

## தரு - ஆனந்தபைரவி

மஞ்ச குங்குமமிட்டு மனங் கொண்டிருந்திடாமல்
வதனம் வெளுத்திருக்கவோ தியாகராசா
அஞ்சி பயந்தொதுங்கி அரிவையர் யென்னை
யேச அடியாள் விதி வசமோ தியாகராசா
மனஞ்செய்யும் வாசலிலே மாங்கல்ய மாத
ரென்று வந்தென்னை ஏசுவாரே தியாகராசா
சாந்து புனுகு கந்தம் சவ்வாது மிக பூசி
தழுவணையில் படுத்தேன்
ஆர்ந்த புழுதிதனில் அடியது தானுறங்க
அடியாள் விதிவசமோ தியாகராசா
ஆரம் பதைக்க மாலை ஆபரணங்கள் தாலி
அணிஅணியாய்ப் புனைந்தேன் தியாகராசா

பார்க்கழுத்தில் காரே பணியாக பாவமோ

அறிகிலேனே தியாகராசா

அட்டிகை மணியாக ஆனந்த பைரவியே

கெட்டியாக பாடினேன் தியாகராசா

## தாதி விருத்தம் - பந்துவராளி

கன்னியர் கள்முன் பாக காரிழை யாள்தாம் புலம்ப
யென்னசெய் வோமோ யென்று மெத்தயேங்கி பரத விக்க
அன்னைய ரேஉங் களுக்கு ஆரூரார் கிருபை தனையேப்
பண்ணுவார் தானு மிப்போ பரதவிக் கவேண்டாங் காணே

## தரு - பந்துவராளி

தியாகேசா யான் பாவியானேன் யென்னே காரும் தியாகேசா
யேக மன்னன் மைந்தனிழந்துமே யிருக்கவே யிந்தப் புவிதனிலே
நானே
யெனக்கு யாருந்துணையில்லை பாருங்கடைக் கண்ணாலென்னே
கூறு செய்திட நீருமிப்படி கோபமோ மனஸ்தாபமோ திரு
தியாகேசா
தர்மமுள்ள யெங்கள் பேரில் வர்மஞ்செய்வ துமக்கு
செரமப்பட யென்னாலே முடியாது
பொறுமை பொறுமை பொறுத்தருளும் யீசனே
யேயென்னால் சகிக்க முடியாது நீ கிருபை செய்திடும் மன்னரே
பிரித்தென்ன மாயான் துணிந்தன்னலே
ஒன்னுட சன்னதி காணவே தியாகேசா
நீதியுள்ள யெங்கள் குலம்
வேதினைக ளாகாதய்யா யேது நாலிந்த பாவம் வந்ததீசனே
மனதிரங்க ரக்ஷிய மாமறை துதிக்கும் ஈசனே

மாநிலந்துதிகள் செய்திடும் நேம்மா ஒம்மை
பூசை செய்து வரேன் நிந்தை செய்வது நீதியோ தியாகராசா
புத்தியுள்ள பாலன் தன்னே பொல்லா பழி கொடுக்க
சித்தங் கலங்கிவாடுதே இந்த தீவினைக்கு பெண் புறந்தேன்
புவியிலே
தேவர்கள் பயத்தே தீர்க்கவேத் தரவியே விஷத்தை உண்டவர்
பாவியாள் படுந்துயர்
மாத்தியே பந்துவராளியேப் பாடிப் போத்தியே

## தியாகேசர் விருத்தம் - காபி

ஆவின்கன் பழிக்கி மைந்தன் அவனையும் பழியு மீய்ய
மேவுமந் திரிக்கா யெந்தன் வேந்தனார் போன பின்பு
பாவிநா னிருப்ப துண்டோ பாங்கியே யெண்டு சொல்லி
தாவியே மண்ணில் வீழ்ந்து தளம்புவாள் புலம்பு வாளே

## தரு - காபி

கெங்காதர பார்வதி சமதேர தேவர் பரதேசி
யாகினேன் நான் பிரமதேவா
பொங்கர வந்திருத் துருவஞ் செகதீசா நான்
புலம்பி வாடுகுறாரே தியாகராசா
பசுங்கன்னால் பழி கொடுக்கவும் படைத்தீரே
பொல்லா பாவியென்றென்னை கைவிடுத்தீரே
தங்கரதத்தில் மகன்தனை யனுப்பிடலு தானே
யிப்போ தயங்கி காப்பி பாடினேன் மிக நானே

## தேவி விருத்தம் - சேனி

மங்கையும் புலம்பி நொந்து மனமது வேறாய் வாடி
செங்கையை முறித்துக் கொண்டு சேல்விழிகள் நீர்கள் சோர

துங்கநான் சோழ ராசன் சொன்னது துணிந்தி டாமல்
ஏயங்கேநான் போவ னென்று யெழுந்துமே புலம்ப லுத்தாள்

## தரு - சேனி

துரையே உம்மைப் புரிந்தும் துணிவேனோ இந்தத்
துரைத்தனம் விட்டு துரையே
துரையே உம்மைப் புரிந்து துணிய சொகுசான யென் கணவா
யினிய இறையோன் தலைவிதியோ அதுவோ
யீசா கைலாசா செகதீசா மகாராசா விட்டு
துரையே பெண்ணே பழிசுமக்கலாச்சுதே
மனுநீதி முறைக்கு பொன்னே பொன்னே
பழிசுமக்கலாச்சு யென்னு மிந்தப்
புவியிலாச்சே ஒன்னே தனிஷ்டவுமாச்சே
உலகந்தனில் இலகுங் கெடி இலையும்படி அரசாளவே
பெண்ணே
நிலையாகிய அரசை ஆளவும் பாலனிருக்குரானென்று
நினைத்தோம்
புவி மனிதர் போலவு நிலையாகிய அரசும் போச்சுது
நீதி போய் செங்கன் பழியுமாச்சுது கொலையும் வந்து
சூழலாச்சுது
குணமே மனமே இனமே தினமே யான் விட்டு
துரையே மதியே யானுமே உய்யுரிழக்குறேன்
மந்திரி பழிக்கி மகனே கன் பழிக்காக அரைக்குறேன் மதியே
ஒந்தனேப் பிரிந்து யானுமே மடியலு மதியே
விதியினால் வருமே அவர்க்குந் தோனமே
மேவி கன்னுந் தாவி தேரிலாவி விடலாச்சுதடி பெண்ணே

மன்னவர் ஒம்மை பிரிந்தும் தனியே வைத்திருப்பேனோ
உயிரும் யினியே யென்ன மாயமோ யானுமறியே
யிணையே துணையே உனையே கணவர் உமையாளவிட்டு
துரையே
தனியிருப்பேனோ யென்று உரைக்கவே முன்னாளில்
நான் செய்த தவத்தினால் வந்த மகனே அரைக்கவோ
தனியே யிருந்து ராக்ஷிய பாரத்தைத்தானே ஆளுவாய்
சகலதேசத்தே சேனிபாடி நான் ஆரூர் போகவே
யுரிதா பெரிதாகரிதா அரிதா நான் செல்ல (பெண்ணே)

## முகாரி

தின்மையா சகுனங் கண்டு திரும்பினால் நமக்கும் இந்த
வன்மையும் வாரா தென்று மன்னவன் முகத்தே பார்த்து
கொம்மை சேர் இம்மையோ மென்று
செய்யி வோம் என்னுட பிராண நாதா

**வசனம்** - வாருங்களய்யா சுவாமி நம்முடைய குமாரன் திருவாரூர்க்கு போற போது அபசகுணங் கண்டுதேயானால் திரும்பி வருவானே அப்படிக்கி அபசகுணங் காணாமல் இப்படியா கொத்த துன்பங்கள் வந்துதே யிதுக்கு யென்ன செய்ய போறோமய்யா சுவாமி

## ராசாவிருத்தம் - தோடி

மன்னனு மங்கை தன்னை மனமது தேத்தி நன்றாய்
கன்னது மடிந்த தர்க்கு கடிகிநா மிருபே ருந்தான்
இன்னகர் தன்னை விட்டு இணையில்லா ஆரூர் போக
வண்ணமா தேரி லேற வந்திடு மாதே யென்றான்

**வசனம்** - வாரும் பெண்ணே நீ யிப்படி புலம்பி பிரலாபிக்கிறது சரியல்ல நாமிருவரும் தேரேறி திருவாரூருக்கு போவோம் பெண்ணே திருமனுதேவி

## சபைவிருத்தம் - நீலாம்பரி

வேந்தனு மனைவி யாளும் மிக்கவே தேரி லேறி
அந்தபுற மாம்தி ருவாரூர்க் குஅவ்விஞ் செல்லும் போது
பாந்தமா வளஞ்சோ லைப க்ஷிகளுமே தன்னைப் பார்த்து
சாந்துபோல் புனுகு வீசும் தய்யலும் புலம்ப லுத்தான்

**வசனம்** - யிந்த பிரகாரமாக மனுநீதிசோழ மகாராசாவும் அவன் பெஞ்சாதி திருமனுதேவியும் தேறிலேறி கொண்டு திருவாரூர்க்கு போகும் போது வறியிலே கண்ம பக்ஷி மிருகங்களைப் பார்த்து என் மகனை போக எட்டாமல் நீங்கள் தடை செய்யலாகாதோ வென்று புலம்புகிற விதம் எப்படியென்றால்

## தரு - நீலாம்பரி

செம்பகமே பூங்குயிலே சேர்ந்த விருவண்ணமே
வம்புரைக்கும்வண்டுகளே என் மைந்தனே தடுக்கொண்ணாதோ
யின்பமாக நீங்களுந்தான் ஏகவே வழிவிட்டீரே
துன்பம் வந்து நேந்துதய்யோ சொல்லிட்டீரே யெந்தனுக்கு
மானே மதகரியே வலியானே நீரும் யிப்போ லுணையுங்
குறுக்கிடாமல் போகவே வழிவிட்டீரோ மருவி வரு
மன்னனெந்தன் மைந்தனைத் தடுத்திடாமல் வரிசையுடன்
நீலாம்பரி வன்மையாய் பாட வைப்பித்தீரே

## சபை விருத்தம் - தோடி

கோதையும் வேந்த னாரும் கூடியே தேரி லேறி
ஆதியாதி ருவாரூ ருக்கு அருகினில் வருகும் போது
வேதினை யாலே வீதி விடங்கனும் பூமி தன்னில்
வாதினை படுவ தெல்லாம் மாதுதான் பார்த்திட் டாளே

## விடங்கன் விருத்தம் - நாதநாம கிரிகை

தர்க்கனு மதத்தால் முன்பு தன்னுயிர் இழைந்தா னய்யோ
மிக்கதோர் வாலி தானும் மிகமதத் தாலே மாண்டான்
முக்கண்ணன் மதளை யாளை மிகுந்ததோர் சூரன் மாண்டான்
பாக்கண்ண னும்மதத்தால்யா னும்யென்னு யிர்பாழாக்கலானேன்

## தரு - நாதநாம கிரிகை

செப்பியதோர் வேதமெல்லாம் கார்பினையாய் செய்ததற்கோ
தியாகத் திருத்தியாக
இப்படி யென்தலையில் எழுதிவிட்டீரே தியாகா திருத்தியாகா
போகாதே யென்று சொன்னபுத்தி மந்திரி சொல்லை யானும்
ஆகாது யென்று சொல்லி ஆரூர்தனில் வந்தேனே தியாக
தந்தையர்கள் யென்னா சொல்லி தவித்திருப்பார்களோ தியாகா
திருத்தியாகா

கலையிழந்த மான் போல வாடி கலங்கி
தவிக்குராளே தியாகா திருத்தியாகா
உலை மெழுகாக ஆடி நாதநாம கிரிகை பாடி தியாக திருத்தியாகா

## தேவி விருத்தம் - முகாரி

புள்ளையு புலம்பும் போது பூவையு மனது நொந்து
அள்ளியே நஞ்சை உண்ட ஆரூர் தனிலே வாழும்

வள்ளலும் யெங்க ளுக்கு வன்மையாய் யெழுதி னாரே
தள்ளியேறு கத்து மய்யா ஆரூரார் சரண மய்யா

## தரு - முகாரி

அப்பா மகனே ஒன்னே ஆரூர்தனிலே அரைகவு யிப்போ
யெப்படி மனஞ் சகித்திருப்பெண்டா யீசாவாசா நேசயினி யென்ன
செய்வேன்

(அப்பா)

சுத்தமக னென்றுனை நான் பெத்த வித்தைகளெல்லாம் உணர்ந்து
கத்த
எத்திசையும் ஆள்வாயு மென்றுமேத்த விரைவவே வேந்தனும்
யானுஞ்
சித்தம் உயரவா சுத்த மனதா நாங்கள் சுவாமியைத் தவம்
புரிந்தமேயதா
பத்தியுடனே ஞான் பெத்தெடுத்தண்டா
பாலா லோலா சீலா கோலமே யான் பெத்த

(அப்பா)

யிந்தவசை நிற்குமே என்னும் யிறங்கி அழுகாத மாமன்னனுஞ்
சொந்தமுடன் பெத்த பசுங்கன்னும் படிய கலங்குறேனடா
மனதுஒடிய
ஒன்னால் முடிய மந்திரி உன்பழிக்கி முன்னவனும் மடிய
மன்னனும்மனமெலிந்து வாடலும்மகனே குகனே சிவனே அரனே
யான் பெத்த அப்பா மகனே அன்ன ஆகாரம்
யினி உண்ணேன் அள்ளி இட்டாயே தெரு மண்ணே
யென்னே நான் செய்வனடா கண்ணே மணியே
யெப்ப காண்பனோ திருமுகத்தே யினியே
யென்னா வினையே யேங்கி யழுது யிருக்கேன் தனியே

சின்ன கண்ணா லொன்னே பழிகொடுத்திட சிவனே குகனே
முகாரி தனியாக பாடினே அப்பா மகனே

## வீதி விருத்தம் - காம்போதி

அன்னமா போவரும் இந்த அவனியில் மனித ரெல்லாஞ்
சின்னமா உரைக்க நாமுஞ் செவிதனில் கேழ்க்க லாக
உன்னுடை துயரம் தூங்கி உறுதியா மனதி லெண்ணி
யென்னைய தேர்க்கா லிட்டு யிக்ஷணம் அரைக்க வாரீர்

**வசனம்** - அகோ வாருங்களம்மா தாயே யென்ன பார்த்து பிரலாபிக்குறது சரியல்ல யென்னே தேர்க்காலிட்டு அரைத்து விடுங்களம்மா தாயே

## தரு - காம்போதி

மகனே ஒன்னே அரைத்து யானுமே மண்டலந் தன்னில்

வாழ்ந்திருப்பேனோடா
சுதனே யொன்னே பெறுவதற்கு நான் சுகுரத விரதஞ்
சகித்திருந்தேனடா
மகனே அம்மா அழுகாதே யென் தாயே ஆரூரான் செய்த பாரி
மோசமிதுக்கு
சும்மா விம்மி அழுதாலே பசு தோழ(ச)ந் தீர்ந்து தொலையுமோ
பாவம்

பாவந்தீருமென்றாயே
யெந்தனே பத்தியுடனே கேழ்க்க வந்தாயே
கோபமாய் பசுங்கன்னே கொன்னே யானால்
குலையும் பாவம் நிலையுது தாபம்
நிலையிது மிகவுன்றுரைத்தாயே

அலையுதே பசு அம்மா நான் யென்னா செய்வேன்
கொலையு நம்முளே வந்தனுகாமல்
கூசாமல் பாசம் மறைத்திடும்
பாசமா ஒன்னே அறைத்து யானுமே பாத்திருப்பேனோடா
கூத்தன் கை ஒப்பித்து
மோசமாய் பசுங்கன்னு மாண்டதற்கு
ஆசை மகனே அரைப்பதுண்டோ சொல்
சொல்லுமென்று கேழ்க்குமென் தாயே
நல்லது முன்னாலாண்ட மன்னனும் தள்ளும்படியா
நீதியில்லாமல் தானொரு புருவுக்கு
யேன் உயிரிழந்தார்
மெய் தான் மகனே
ஒன் கையால் பசுங்கன்னு மாள இல்லே
மெய் பதறுதே ஒன்னே புரிந்திட்ட தெய்வம்
யிவ் விதம் செய்திடலாமோ
ஆமோவென்று அழுகுறாமய்யா
ஆரிலொன்றும் வாங்கி ஆண்டிருந்தால்
நாமோ நீதி பிசகி நடந்தால்
நகைக்குங் காம்போதி
பகைக்குங் சனங்கள் அம்மா அழுகாதே யென்தாயே

## தேவி விருத்தம் - ஆனந்தபைரவி

யென்னுட மகனே அப்பா உனக்கிவ்வி திவந்த தென்று
தன்னோட அரசு செங்கோல் தானுழ்வாய் என்றி ருந்தேன்
கன்னுடன் பழியா லொன்னெ கதறவே அறைக்க தானும்
விண்ணுடன் மண்ணுங் கூட மெலியுதே யென்னா செய்வேன்

## தரு - ஆனந்தபைரவி

முத்தே மரகதமே வித்தே களஞ்சியமே சித்த மருகுறதுண்டே
மெத்தவமிருந்து பெத்த வயரெனக்கு பத்தி யெறியுதடா
யெரியுது யென்று நீ யிளைத்து மனங் களைத்து போகாதே தாயே
அரிஅயன் விதித்தபடி யல்லால் வேறே ஆகுமோயினி யொன்றும்
அம்மணி அழுகாதே நீ அழுகாதே
ஆ நமக்கு ஆரூரான் கிருபை செயிவார் அஞ்சாதே தாயே
அஞ்சாமலே இருந்த நெஞ்சம் உருகுதடா தஞ்சம் வேறில்லையடா
கொஞ்சுங் கிளியே பாலா மிஞ்சி உனை அறைத்து
கோதை தெளிவேனோடா
தெளிவேனே யென்று நீ வேறோ யென்று
நீ தேம்பித் தேம்பி யழுது தயங்காதே தாயே
பழி வருமே யென்று பரதவிக்காமலே
பரிந்து வருந்துகிறாயம் மணி பழியாகாதே
பழியாகாதே பொல்லாத பாவிகள் போலே நின்று பதறாதே தாயே
பதறாமலே ஒள்ளை செதற அறைந்து யானும்
பாத்துமிருப்பேனோடா
ஒதருதே யென்னுடலும் உருகி மெழுகாகுதே உறுதி சொல்லடா
மகனே
சொல்ல சொன்னா சொல்ல சொன்னா யெனக்கு யென்ன தெரியும்
தோழ(ச)ம் தொலையுமோ பாவம்
வல்லவனாகிய மயேசபரன் பாதத்தை வணங்கி தினமும் யிரு
அம்மணி
மயங்காதே நீ தயங்காதே நமக்கு மாதவர் கிருயை செயிவார்
மலையாதே தாயே

மாதவஞ் செய்யும் போது யெதுக்குத்தாஞ் செயிதமோ மனதுந் தத்தளிக்குதடா

போற்றவர்ப் போச்சுதென்று பொருந்தாமலே நீயும் பொலம்பாதே தாயே

அய்யர் தியாகர் மேலானந்த பைரவியே அன்புடன் பாடினேன் அம்மணி

அலையாதே நீ மலையாதே ஆ நமக்கு அண்ணலார் கிருபை செய்வார் அழுகாதே தாயே

## ராசா விருத்தம்

புத்திரன் தன்னே பார்த்து பூவையும் புலம்பும் போது
சித்தமுங் கலங்கி மன்னன் திடுக்கென தேரை விட்டு
தந்திட குதித்து பாலன் தன்னையே தழுவை கையால்
யித்தனை வந்து தோன்ற யென்செய்வேன் மகனே என்றால்

## தரு - முகாரி

மைந்தனே யென்ன செய்வேன் அன்யாயமாய்
வந்த விதியிதுவே ஒந்தன் மேல்
சிந்தை வைத்து அனேக நாள்
அந்தி பகலாகவே யிந்த அரணமணியும்
வசந்த சுந்தர தியாகனார்க்கு
முந்தி தவமிருந்து ஒந்தனையே பெத்து
வந்ததும் யிப்படியோ வந்ததும் யிப்படியோ
சீலமா யரசாளவோ வேதுவா யெண்ணி சிந்தை மகிழ்ந்திருந்தேன்
பாலகா ஒ(ன்)னே இந்த பசுவின் கன் தனக்காக பழிசெய்ய வகையாச்சே
கோலமான தண்டையும் பாலகா நீ கொஞ்சி கொஞ்சி வரவே

மாலாகவே யானும் மகிழ்ந்து மிகுந்ததற்கு
மலரயன் வகுத்தானே

(மைந்தனே)

## வீதிவிடங்கன் விருத்தம்

தந்தையும் நொந்து வாடி தயங்கிடும் வேளை தன்னில்
எந்தனா லிந்த கன்னும் யிறக்கவு மாச்சு தய்யோ
முந்தவே பழயு மீய முயங்கிட வேண்டாங் கண்டீர்
யெந்தன் பழியு மீய எழுந்துடீர் ராச கோவே

## தரு - பந்துவராளி

ஆர் செய்த பூசாபலன் யிது வந்துதோ தாயே
இது ஆண்டவன் சோதினை யானுமறிகிலேன் அய்யா
தேறிய வேதம் படித்தோரை யானுமே தாயே
அவர் சிந்தை கலங்கவே செப்பிணிருந்தேனோ

(அய்யர்)

பாரிலுள்ளோர்கள் பரியாசஞ் செய்வார்கள் தாயே நீங்கள்
பரதவித்தால் சும்மா - ஆர்க்கும் விடாது காண்அய்யா
வாரிகள் சூழ்ந்திடும் வையகந் தன்னிலே தாயே அந்த மன்னர்க்கு மேலாக

ஆளாயிருந்தனோ அய்யா
அந்தணர் மாமுனியோ நான் வைதேனோ தாயே
அரும்பழி தானுமே அணுகிதே யென்னை பெத்த அய்யா
அந்த விதியை யெவராலும் தானுமே தாயே
அந்த மாயவன் தன்னாலும் மாத்த ஒண்ணாது காணய்யா
யெந்தனை யிந்த பசுவின் கன் தனக்காக தாயே விப்போ
யென்னை அரைப்பது யெல்லார்க்கும் நன்மை காணய்யா

கந்தனை யீன்ற கடவுளர் சோதினை தாயே
பந்து வருளியால் பாலகன் பாடி னேனய்யா

## தேவி விருத்தம் - முகாரி

கொப்பணியும் கருங்குழலால் குழந்தைமுகம் தனைபார்த்து குமார
என்னை
செப்பமுடன் பெறுவதற்கு மன்னவனும் யானும்மனம் திகைத்து
மெத்த
அப்பணியும் திருவாரூர் மண்ணலார் மகிழ்ந்து வரமளித்த போது
யிப்படியோ முடியு மென்று இறைவனும் யெந்தலையில்
எழுதினானோ

## தரு - முகாரி

அய்யோ யிதங்கொடும் பாவஞ் செய்தாலரண் கெடுமே
கையிலே மழுவேந்தன் அய்யன் தியாகரே
மெய்யன் பாதத்தை விரும்பி பூசிக்காமல்
(அய்யோ)

யெங்கள் குலம் விளங்க தவமிருந்தெங்கும் கெ(ா)டி முழங்க
பங்கயமுகம் வியங்க மகிழ்ந்திட பாலகனாக நீ பிறந்தாய்
செங்கையி லேந்தியே சீராட்டி தாலாட்டி பொங்கமா வளர்த்த யென்
னங்கம் உருகுதடா
(அய்யோ)

ஞாலந்தனில் பிறக்க உயிரேழு பிறப்புதனில்
சாலம் கொடுமை செயிதால் மகிழ்ந்திட பாலனு நீ பிறந்தாய்
கோலஞ்சேராவின் கன்னே நீ கொல்லவும் ஆலமுண்ட
அரஞ்சோதினை யல்லவோ
(அய்யோ)

தங்கமுடி சூட்டி மகனே நீ தாரணி ஆளாமல் ஒன்
அங்கத்தே ஆவின் கன்னால் படுகொடுத்தங்கே அரசாளவோ
மங்களமா ஒன்னே வைத்த நான் பாராமல்
திங்கள் முகாரியே தியாகர் மேல் பாடாமல்
(அய்யோ)

## வீதிவிடங்கன் - முகாரி

யென்செய்வே னென்று மெத்த யேங்கியே அழுதுந் தாயே
செய்த வினையைத் தானும் முயங்கியே தள்ளப் போமோ
தன்செய லாலே ஒன்றுந் தள்ளவே போகா திப்போ
அன்செய்த யெழுத்தை தானும் ஆருனா லழிக்கப் போமே

## தேவிதுள்ளடி - காப்பி

மலை போலே நிற்கின்ற தேர்க்காலிலே ஒன்னயே வதையென்று
எண்ணி மிகவே
சிலைபோலே ஒந்தனைச்சிதறவே அரைத்து நான் சிந்தை
மகிழாமலேயா நொய்வேன்
விந்தை தியாகேசரை நான் வைவேன் யிந்த விதிக்கென்னா
செய்வேண்டா யென் மகனே
யிளமை வயது வீணாகுதே - வீணாகுதென்று தாயே முன்னின்று
விசனப்படாதே அம்மா
ஆனாலு மீசரடியேனை கார்ப்பார் அழுகாதே தாயே சும்மா
சும்மா வயறு பத்துதேடா சுந்தரமுகம் காண்பேனோடா
காண்பேனோ வென்று கலங்காதே அம்மா
கண்ணீர் விளம்பெருகவே
தேன் பாவுமே உன் திருவாரூரு அவர் திருமேனி காண பழுதோ
பழுதாப் போமோ யெங்கள் தர்மம் பார்ப்பனோடா பாவியானும்

அந்த யெண்ணம் யெண்ணி விதனங்கள் நன்னி
அழுகாதே கண்ணீர் மிகவே
மதியா தையாகவே மாயாவின் கன்னு மான்டுமே போச்சு
திது காண் - கண்ணே யெந்தன் கண்மணியே காண்பேனோடா
திருமுகத்தே
திருமுகம் பார்ப்பதென்றறிதென்று சொன்னீர் தேவர்க
ளிகழலாச்சுதே
தேசிகன்பாதமேபணிந்து நாயெப்போதும்தேடினான்வாரேனம்மா
அம்மா வென்றென்னை ஆர் சொல்லுவர் அன்பாக காப்பி பாட
செய்வர்
(யென்ன செய்)

## ராசா விருத்தம் - முகாரி

பஷ்சமாய் பாலன் தானும் பகர்ந்துமே உரைக்கும் போது
அச்சணம் தன்னில் ராசன் ஆனதோர் மகனே பார்த்து
துஷ்டிகள் முடித்து கொண்டு சுகமுடன் வருவா யானால்
யிஷ்சனம் தன்னில் தேரில் யேத்தியே அரைப்பேன் பாலா

**வசனம்** - வாரும் பாலகனாகிய வீதி விடங்கா கமலாலையத்திலே ஸ்நானம் பண்ணி நேம நிஷ்டைகள் முடித்துக் கொண்டு நம்முடைய யிஷ்ட்ட தெய்வமாயிருக்கானின்ற அசைந்தாடும் தியாகராசாரிடத்துக்குப் போய் புனர்சென்மம் யெடுக்காமல் வரங்கேட்டு வந்தாயானால் பூலோகமுள்ள வரைக்கும் கீத்தியடையதக்கதாக தேர்க்காலிட்டு அரைத்து விடுகுறேன் பாலகா

## விடங்கன் விருத்தம் - தன்னியாசி

செப்பாரு மனுநீதி சோழேந்திரன் செருவினில்ல செருமையினால்
சேர்வை சேர்ந்து

ஒப்பான அரும்வரத்தால் திருமனு தேவியைத் துதித்து
யானும் மெய்யான செ.. .. ..தேறிலா வி(ட)ங்கன்
அறைத்துவே தான் யெண்ணி யிப்பாடு
படுவரன்றோ யிறையவனுந் தலையோட்டில் யெழுதினானே

## தரு - தன்யாசி

ஆரை நான் னோவேனய்யா தியாகனாரே உம்மை அண்டினேன்
வேறில்லை யெந்தனைக் காரும் தியாகனாரே
பேரான உம்மையன்றி தியாகனாரே பொல்லாபெரும்பழியாகவே
அரும் பழியாச்சே தியாகனாரே நான் புள்ளைகள் பெற்றதற்கோ
தியாகனாரே
யெங்கும் பேர் பெறவே மனு பாராள வேணுந் தியாகனாரே
வெள்ளம் பெரண்டது போல் தியாகனாரே பொல்லா
வளைகளாகி பாதகனானேன் தியாகனாரே
மெத்த தவமிருந்து தியாகநாரே சொல்லால்மெலியவும்கண்ணால்
நலியவுமானேன்
யென்னை பெத்ததற்குமே தியாகனாரே கய்யில் ஏந்தியே பலம்
போல் வேந்தனுக்கரசே தியாகநாரே
யிஷ்ட தெய்வமும் நீரே தியாகநாரே
மனதிறங்கியே அரகரா வரந்தர வேணும் தியாகநாரே
யெந்திசை தன்னிலுமே தியாகநாரே
நானிப்பவே தன்னியாசி செப்புவுமானேன் தியாகரே

## வெடங்கன் விருத்தம்

செப்பவே பாலன் தானுந் திடுக்கென யெழுந்து சென்னி
அப்பணிச் சடையீ சன்ஆ ரூருதனில் வாழு கின்ற
யிப்புவி தன்னில் யானும் யிரந்துமே பிறந்து டாமல்

மெய்ப்பதந்த ருவாயென் றுவீதி விடங்கனுந் துடங்கி நானே

## தரு - பந்துவராளி

பிறவிகளாகா புணர் சென்மம்
புரவிகளாகா புனித தியாகேசரே
வரமெனக் கருளுவீர் மங்கை பாகா இப்பேர் பிறவி
அநதணர் குலந்தனில் அருமறை வேதம் ஓதும்
விந்தையா ஒருவன் கைவேண்டாம் பாவமெத்த பிறவி
தருமமில்லை
யிந்தத் தனத்தச்ச குலதர்மம் செய்யாவிட்டால் தாவும் பாவ
மெத்தபிறவி
வைசியனாக பிறந்து வாணிபம் செய்வதிலும்
இசையில்லா பாவத்தால் யேற்கும் பாவம் மெத்த பிறவி
சூத்திர குலந்தனில் சுகுந்த பூமித் தொழில்
யேத்திய அரசர்க்கு இளப்பம் யென்று சொல்வார்
பிறவி நான்கு ஜாதி தன்னில் நடக்கும் பாவம் மெத்த பாங்குடன்
பந்துவறாளி பாடி சுத்த பிறவிகளா தன்யாசி
தேவாரம் உயிர்களோடிசைந்த இன்பம்
இன்பத்தோடு இசைந்த வாழ்வு பரவிழ்த்தன்ய கோவே
பத்தியா நோக்கினோர்க்கு திறைகுணம் தீண்டித்
தேறி செம்பொன்னும் மணியும் தூவி அலைகள்
இறைஞ்சு ஆரூரப்பனே அஞ்சினேனே

## தரு - தன்யாசி

தியாகய்யா யெனக்கருள் செய்யுமய்யா
அருள் செய்சங்கரனே அரியமுப்பரனே
அய்யா வேகுதய்யா தனமய்யா

அருள் செய்யுமய்யா தியாகேசா
சந்ததமுனை நான் சிந்தையில் நினைந்து
ஆரூர் யிடர் தீராய் கிருபை பாராய் அருள் செய்யுமய்யா தியாகய்யா
இந்திரன் முதலோர் வந்துமே புரியீசா செகதீசா கைலாசா
அருள் செய்யுமய்யா தியாகையா
சன்னதி நாடினேன் தன்யாசி பாடினேன்
தாராய் வரம் நேராயென்னே பாராய்
அருள் செய்யுமய்யா தியாகையா

## வீதிவிடங்கன் தேவாரம்

மூலமாகிய முதலே திருவருளே முதற் பொருளே
காலமா யென்னை வகுத்தாய் குலைவிடுத்தாய் மனமுடித்தாய்
வேலை போல் சம்சாகரம் விழுந்தே அழுவேனோ
ஆலகால விழ(ச)த்தை உண்ட அப்பனே ஆரூர் அரனே

## தரு - குறிஞ்சி ராகம்

யென்னா செய்வேன் தியாகநாரே யேது செய்வேன் யிவ்வாதினை
முன்னமே பழியழிக்க முடங்கிட செய்திடீரே
சின்ன வயதிலே பசுங்கண்ணால் பழி கொடுக்க நீரும்
எனை படைப்பித்த தியாகா யீசா கயிலாசா
ஆசாரமதாக உன்னை நேசமுடன் பூசை தன்னை
பாசமா செய்யாமலே யான் பாவத்துக்குள்ளானேன்
சுந்தரர்க்கா தூது சென்றீர் தொண்டன் மகன் தனையே உண்டீர்
யெந்தன் மீதில் கோபம் கொண்டீர் யென் பழியே விண்டீர்
புட்டுக்கு மண்சுமந்தோனே புண்ணியமார்க்
கண்டருக்கா இடதுகாலால் எமனை உதைத்தீரே

தக்கன் தனை தலையறுக்க தானே கோபம் கொண்டு
நீரும் மிக்க வீர பத்திரராலே வேள்வியை அளித்தீரே
நரியை பரியாக செய்த நாயகனே ஆரூர் வாழ்வே
அருகில் நின்று குறிஞ்சி பாட அடியேனை ரெக்ஷிப்பாயே

## விடங்கன் விருத்தம் - தோடி

கேட்டதோர் பாலன் தானும் கெடியது ஸ்தானஞ் செய்து
ஓட்டமா ஓடி வந்து உயந்திடும் தந்தை யர்க்கு
வாட்டமில் லாம லேதான் மனமது மகிழ யிப்போ
நாட்டினில் புகழ வேதான் நன்மையாய் அரைந்தி டுவீரே

**வசனம்** - வாருங்களய்யா சுவாமி தேவரீர் சொன்ன பிரகாரம் கமலாலையத்திலே ஸ்நானம் செய்து நேம நிஷ்டைகளை முடித்து கொண்டு நம்முடைய யிஷ்ட தெய்வமாய் இருக்கா நின்ற அசைந்தாடுந் தியாகேசர் சன்னிதிக்கு போய் பிறவிகளாகாமல் வரம் கேட்டு வந்தேன் இப்பூலோகம் உள்ளவரைக்கும் அரைந்து விடுங்களய்யா சுவாமி

## ராசா விருத்தம் - முகாரி

அரையுமென் றுஉறைத் தபோது ஆனதோர் பாலன் தன்னை
கரத்தினால் எடுத்து மன்னன் கருத்துடன் மடியில் வைத்து
நரைத்ததோர் நாளை தன்னில் நமக்குமே பலனைத் தந்து
உரைத்தவன் துயரத் தோடே உருகியே புலம்ப லுத்தான்

## தரு

அதிரூப யென்மகனே உன்னேயானும் பலி கொடுக்க அருந்தவசு
புரிந்தோமடா
அப்பா யென் கண்மணியே அருந்தவசு புரிந்ததினாலாவாது
உண்டோ அய்யா

அன்னு பிரமன் யெழுதினதை ஆரால் தள்ளப் போமோ
தள்ளப் போகா விதியே மதிதனில் நினைந்திருந்தாய்
தாவி பலி கொடுக்காமலே மேவி மாண்டாள் மந்திரி
மேவி மாண்ட மந்திரி யென்னால் ஆவி பிரிந்திட
நான் மிக யென்னை பலி கொடுத்தால்
மெய்க்கும் ஒம்மை உலகம் பழி கொடுத்த விழியால் ஒன்னே
பார்ப்பதுண்டோ
மகனே பஷ்ச்சமுள்ள மந்திரி பழி நிஷ்ச்சயம் தானே
ஆனால் புவியாள்வதற்கு அரசறணி யாரு
ஆறிலொன்று வாரம் வாங்கி ஆதரிப்பதாரு
ஆதரிக்க வேதமுண்டு அஞ்செழுத்து மந்திரமுண்டு
பொருளாம் அனுதினமும் மனதிலெண்ணி அறிந்தவர்க்கு மருளாம்
அருளாவது பொருளாவது ஆர் செயில் தானய்யா
அரனே போத்தி முகாரி ஏத்தி அரைந்திடுவீர் மெய்யா

## சபை விருத்தம் - பந்துவராளி

செருவனே தேரி லேத்தி தெருவீதி வருகும் போது
பரிசென வேந்த ரெல்லாம் பாவியென்று உரைக்கக் கேட்டு
தரைதனில் முகத்தே நோக்கி தடுத்துஉ ரைத்தி டாமல்
வரைபெருந் துக்கத் தோடே மன்னனும் வாட லுத்தான்

**வசனம்** - யிந்த பிரகாரம் மனுநீதி சோழ மகாராசாவானவர் தன் பாலகனாகிய வீதி வெடங்கனை தேர்க்காலிட்டு அரைக்கிறதுக்கு தேரிலேத்தி தெருவீதி வருகிற போது திருவாரூரிலே செனங்க ளெல்லாம் மனுநீதி சோழ மகாராசாவை பார்த்து நாலுவிதமாக சொல்லி புலம்புவிதம் யெப்படி யென்றால்

## தரு

மனுநீதி தவறாத மன்ன னெம்பார் சிலபேர்கள்
புனித விளங்கும் கீர்த்தி பூபாலனென்பர் சிலபேர்கள்
பாலகனை கொல்ல வந்த பாவி யென்பார் சிலபேர்கள்
பந்துவராளி பாடி பரதவிப்பார் சிலபேர்கள்

## ராசாவின் சபை விருத்தம் - தோடி

கலகல வென்று தேருங் கடிகியே வருகும் போது
பலபல நகரத் தோரும் பாவியென் றுரைக்க கேட்டு
தலைதனை குனிந்து மன்னன் தடுத்துமே உரைத்தி டாமல்
யெலைபோ லேஆ டிமன்னன் யெண்ணியே துணிந்துக்
கொண்டான்

**வசனம்** - யிந்த பிரகாரமாக மனுநீதி சோழ மகாராசாவானவன் தேரேறி வருகுற போது அந்நகரத்திலுள்ள சனங்கள் பல பல விதமாக சொல்லுவதை காதிலே கேட்டு தன் பாலகனாகிய வீதி விடங்கனை தேர்க்காலிட்டு அரைக்கிறதற்கு மனதை தானே தெளிந்து துணிந்து கொண்ட விதம் காண்

## ராசா விருத்தம் - சங்கறாபரணம்

அந்தமா வீதி யினிலே விடக்கற ராசந் தானும்
வந்துமே கன்னை கண்டு வகையதா நின்று கொண்டு
சிந்தையும் தெளிந்து மன்னன் திடுக்கென தேரை விட்டு
விந்தையா தள்ளி வீதி விடங்கனை அரைத்திட் டானே

## தேவி தரு - சங்கராபரணம்

யென்னு செய்வேன் மகனே யேது செய்வேன்
நான் நிவ்விதிக்கு மகனே யேது செய்வேன்

உன்னை யானும் பெறுவதற்கு ஒரு பொழுதே
யானும் உண்டேனோடா கும்பிடாத மகனே கோவிலெல்லாம்
நான் கோரினேனே மகனே யென்னு செய்வேன்
ஆலமுண்ட தியாகர் அளித்த போது யிந்த அமைப்பு வந்து மகனே
நேந்துதோடா முத்தான வாய் திறந்து
யென்க்கு உத்தரவு மகனே சொல்லொண்ணாதோ
தங்கவாயை மகனே திறவொண்ணாதோ
சங்கராபரணங் கொண்டு பாடொண்ணாதோ

## தேவி விருத்தம் - யெதுகுல காம்போதி

அரைக்கவே பாலன் தன்னை அரிவையும் அடித்து மோதி
தரைதனில் விழுந்து மேசெந் தாமரை நீர்போ லாக
பறக்கவிட் டாயீ சாப ராபரப்பே ரருளே வாசா
யேர்க்குறேன் யென்று சொல்லி யெழுந்துமே புலம்ப லுத்தான்

## தரு - யெதுகுல காம்போதி

பொட்டிட்டு மையிட்டு புனுகிட்ட மேனிக ளெல்லாம்
வெட்டாந்தரை தனில் வேறாயி கிடக்கிறாய் மகனே
தட்டு புனுகு ஜவ்வாதுகள் யிட்ட திரேகம்
யிப்போ கட்டாந்தரைதனில் கண்டம் வேறானாயோ மகனே
மகனே யென்று வாரி யெடுத்த கையாளே யிப்போ நினங்கள்
சதைகுடல் நைந்து எடுக்கவு மானேன்
தாயென்ற சொல்லை நீ தப்பி மறைந்தாயோ மகனே
யிப்போ பேயி போலே நின்று புலம்பித் தவிக்கிறேன் சிவனே
முத்தான பல்லையும் கஸ்தூரி திலகமும் கண்டு
பெற்ற வயிறு யெனக்கு பற்றி யெரியுதே மகனே

பஞ்சனை மீதில் கொஞ்சி விளையாடும்
கால்கள் இப்போது துஞ்சி பிளந்து நீ
சோந்து கிடக்குறாய் மகனே
ஆரை பழித்து நான் அனியாயம்
செய்தேனோ மகனே
ஒன்னை தேரிலரைந்து நான் சிந்தை கலங்குறேன் சிவனே
தேரேறி சென்று திரும்பி வருவாயென்று யெண்ணினேன்
யிப்போ யேறு பழிக்கு யெகுல காம்போதி பாடினேன்

## தேவி கொச்சகம்

தங்கரதம் யேறி மகன் தாரணிகள் ஆள்வான் என்று
யிற்கிதமா நானிருந்து யேழை மதி போனேனய்யா
அங்கிதனில் இட்ட நெருப்பாகவே யென்
அங்கமெல்லாம் பொங்குதே நான் யென்னா செய்வேன்
புண்ணியனே காத்தருளும்

## தரு - காப்பி

பசுவின் கண்ணுக்கா பழி கொடுத்திட பாவி
வளர்த்தேனோ என்ன பாவஞ் செய்தேனோ
திசைகளெங்குமே வசைகள் சொல்லியே
செங்கோல் பெறண்டுதோ உயிறிங்கே
மாண்டுதோ அந்தணருடனே மந்திரிமார்
களவர் கூடிட மகன் ஆரூர் நாடிட
கட்டியிருந்த நல்லாராய்ச்சி மணியும்
கலகலண்டிட மன்னன் கலங்கி நின்றிட
சுட்டி சொல்லாமலே தூதர்கள் வந்து

அருகே சென்றிட மந்திரியர்க்கா
சென்றிட என்னை இருந்தரசாளும்
படியா டியண்ணி யிருந்ததும் பின்னிருவர்
வந்ததும் கன்னியை சென்னியில் உன்னிதமா
வைத்த ஆருர் காப்பி தனையே பாடினேன்

## ராசா தரு - காப்பி

இதுதான் என் விதிவசமோ ஈசர் நான் படவசமோ
சதியால் பசுங்கன் வந்து மாளவும் தகுமோ தானறிகிலேன் தியாகா
இதுதான் பசுவின்கன் பழிக்காக பாலகன் தன்னை அரைத்து
விசுவாசமுள்ள மந்திரி பழிக்கிவதில் பழியாகவே வைத்தீரே
தியாகேசா
இதுதான் யென்முன்னே செய்த தவத்துறையோ முழுதும் உந்தன்
சோதினையோ? பின்னால்புனர் சென்மம்எடாமலே போற்றுமென்
தியாகா மாத்திரம் விடைகொடு
இதுதான் என் - இந்துஸ்தானின் பாதம் தேடி நொந்து வந்த
எந்தனுக்கும்
தந்து கடைக் கண்ணால் பாராயோ தியாகா
(இதுதான் என்)

## ராசா விருத்தம் - பூபாளம்

அரசனும் எழுந்தி ருந்து அறிவையைத் தேற்றி மன்னன்
உறைதனை கயட்டி நன்றும் உகந்ததோர் வாளை வாங்கி
கருதியே ராசன் தானும் கண்டத்தில் அழுத்தும் போது
பறைதனை அறைந்தாற் போலே ஆகாசபாணி பகர்ந்திட் டாளே

## விருத்தம்

அந்தமா மொழி கேட்டு அரசனும் ஆரோ வென்று
சந்தேகத் துடனே கண்டம் தன்னிலே அழுத்தும் போது
தந்துமி முழங்க தேவா சுரர்கள்மு னிவர்கள் கூட
விந்தையாய் ஆரூர் தியாகர் மேவியே வருகின் றாரே

## தரு

வந்தாரே ஆரூர் தியாகர் வானவர் சூழ
வந்தாரே ஆரூர் தியாகர்
நந்தி கணங்கள் கூட நாரதர் கீதம் பாட
விந்தையாய் ஊர்வசி மேனகை நடமாட வந்தாரே

தூவி மயிலேறி சுப்ரமண்யரும் கூட
காவியாகுவிலேறி கணபதியாரும் கூட வந்தாரே
தாவி கெருடனேறி சாமள ரூபனுமே
மேவி அன்னத்திலேறி வேதன்
பூபாளம் பாடி வந்தாரே ஆரூர் தியாகராசர்

## சுவாமி விருத்தம்

பொரும்பொரு மென்று சொல்லி பூபாலர் வந்தோ மென்று
அருகினி லீசன் தானும் ஆனதோர் விடையி லேறி
கறிதனை யுரித்த ஈசன் காணவே வருகும் போது
குருமொழி தவறா வேந்தன் கொத்தவன் எழுந்திட் டானே

## ராசா விருத்தம்

ஈசனே போத்தி போத்தி யிசுபற பொருளே போத்தி
மாசில வடிவொன் றில்லா மங்கையை தரித்தாய் போத்தி

பூசுரர் முனிவ ரோடும் புனிதமாய் ஆரூர் தனிலே
வாசமாயி ருக்கும் எங்கள் வண்மீக தியாகர் போற்றி

சம்போ சங்கரா ஈசா சரணம் ஆரூரில் வாழும்
சம்போ சங்கரா ஈசா சரணம் சுவாமி

**வசனம்** - அகோ வாரும் பிள்ளாய் ராசானின்னுடைய ராசா நீதியே அறியும்படி இப்படிப்பட்ட சோதினை செய்தோம். ஒன்னுடைய சத்தியத்தைக் கண்டு சந்தோஷம் ஆனோம். உனக்கு கயிலாச பதவி தந்தோம். இப்பவே கயிலாசத்திற்கு வாரும் பிள்ளாய் ராசனே

## ராசா விருத்தம்

கன்னது மாண்ட பின்பு கனத்தோர்க்கு மாறன் கூட
முன்னமே பழியு மீந்த முதல்வன்மந் திரியும் மாண்டான்
இன்னகந் தன்னி லுள்ளோர் இக்ஷ்சியாய் பேசு வார்கள்
என்னுட பாதம் தன்னில் உகந்துநான் வருவ தில்லை

**வசனம்** - அகோ சரணம் சரணமய்யா சுவாமி மாண்டும் மந்திரி மாண்டும் பாலனாகிய வீதிவெடங்கனைத் தேர்காலிட்டு அரைத்தும் இப்படி அநேக துன்பப்பட்ட படியால் தங்கள் பாதத்துக்கு அடியேன் வந்தேனாகில் பூலோகத்தார்கள் நகைப்பார்கள். பதவிக்கு வரமாட்டேனய்யா சுவாமி

## விருத்தம்

அந்தகன் தன்னை யாளும் ஆனதோர் கன்னைத் தாக்கி
உந்தனை மனஞ்சோ திக்க உணர்ந்துநாம் பசுவாய் வந்தோம்
மந்திரி எழுந்தான் பாரு ஒன்மகனுமே எழுந்தான் பாரு
விந்தைநான் செய்த தல்லால் வேறுஒன்றும் இல்லை கண்டாய்

**வசனம்** - அகோ வாரும் பிள்ளாய் ராசனே என்னுடைய சத்தியம் அசத்தியம் சோதிக்க யெமன் கண்ணாகவும் யான் பசுவாகவும் வந்து சோதிச்சு சந்தோஷமாச்சு. ஒன்னுடைய சந்தேகம் தீர். தேர் பசுவின் கண் எழுந்தது. மந்திரி எழுந்தான். பாலகனாகிய வீதி விடங்கனே எழுந்தான். வாரும் பிள்ளாய் ராசாவே

## ராசா விருத்தம்

உண்மையா கதை கேட்டு மேற்படி எழுது பேர்க்கும்
நன்மையா பாடி ஆடி நாடகம் செய்த போரும்
புண்மையா களணு கிடாமல் புனர்சென் மமெடுத்து திடாமல்
செம்மையா பேரு தந்து சேந்திடிர் ஆரூர் வாழ்வே

**வசனம்** - அகோ சரணம் சரணமய்யா சுவாமி யென்னுடைய கதையை யார் எழுதினாலும் கேட்டாலும், ஆடினாலும், பாடினாலும் அவர்களுக்கு யெம வாதை நீக்கி புனர் சென்மம் எடுக்காமல் கைலாச பதவி தந்து இரட்சிக்க வேணுமய்யா சுவாமி

## சுவாமி விருத்தம்

அரசனே கேளு மிந்த ஆனதோர் கதையைத் தானம்
வரிசையா பாடி ஆடி வாகுடன் கேட்டப் பேர்க்கும்
உரியதோர் கலியன் வந்து கூத்தனு மணுகி டாமல்
கூறிய மால றியாஇப் போகயி லையும் தந்தோம்

**வசனம்** - அகோ வாரும் பிள்ளாய் ராசா என்னுடைய சரித்திரமாகிய கதையை வரிசையுடனே எழுதின பேர்க்கும் சகலமறிய ஆடிப் பாடின பேர்க்கும் வறுமையை மாத்தி யெமவாதை யில்லாமல் பிரம்மா விஷ்ணு தேவேந்திரன் முப்பத்து முக்கோடி தேவர் நாற்பத்தொண்ணாயிரம் கோடி

ரதி அஷ்ட வசுக்கள் கின்னரர் கிம்புருடர் சிறு வித்யாதரர்கள் யேகாதசிருத்துறாள், துவாதசாதித்தர் சகலுருமாகிய யென் பிள்ளைகளாகிய விக்னேஸ்வரன் சுப்ரமண்யன் சாட்சியாக நம்முடைய சாயுச்சய பதவி தந்தோம். நீரும் பாலகனுமாகிய வீதி விடங்கனும் சேனா சயினிங்களுடனும் மணி நகரமென்னும் நீங்கலாபுரி பட்டிணம் போய் உன்னுடைய சத்தியத்தை நாட்டி செருது காலம் ராச்சிய பரிபாலனம் செய்து பின்பு ஒன் பாலகனாகிய வீதி விடங்கனுக்கு அரசுரிமையைப் பட்டாபிஷேகம் செய்து வைத்துவிட்டு நம்முடைய நான்காம் பதமாகிய சாயுச்ய பதவிக்கு நீங்கள் பதியும் சதியுடனே வந்து சேரும் பிள்ளாய் ராசனே

## விருத்தம்

மாதம்மும் மாரி பெய்து வளமுடன் சோழ நாடு
நீதமாய் வியையுஞ் செந்நெல் நிறம்புடன் வாழி வாழி
மாதர்கள் வாழி யெங்கும் மன்னர்கள் வாழி வாழி
சோதினை செய்ய வந்து டறிளம் பசுவும் வாழி

## விருத்தம் - இதுவுமது

கந்தனும் வாழி வாழி கமலனும் உமையும் வாழி
சுந்தர தூதர் வாழி சோழராசேந் திரனே வாழி
செந்தமிழ் புலவோர் வாழி திருமனு தேவி வாழி
விந்தைசேர் மைந்தன் வீதி விடங்கனும் வாழி தானே

## தரு - பூபாளம்

மங்களம் மங்களம் தியாகேசருக்கு மங்களம்
மங்களம் மங்களம் மங்களம் தியாகேசருக்கும்
மங்களம் வண்மிக லிங்கேஸ்பரர்க்கும் அங்குயரு

சத்தித்தியர்க்கும் அல்லிய கோதையர்க்கும்
மங்களம் மங்களம் மங்களம் கெங்கையும்
புணைகவுரி மனோகறர்க்கும் செங்கழணி
மாலை புனை செவ்வந்தி தோடழகற்க்கும் மங்களம்
மங்களம் மங்களம் அப்பர் சுந்தரர் சம்பந்தர்
அறுபத்து மூவர்க்கும் ஒப்பில்லா பரவையார்க்கும்
ஓதும் வேதியர் தமக்கும் மங்களம் மங்களம் மங்களம்
ஆவின் நடராசர்க்கும் மேவிய மனுராசர்க்கும் விளங்கும்
திருமனைக்கும் மங்களம் மங்களம் மங்களம்

## தரு - ராகம் - கமாஸ்

வாரும் வாரும் வாரும் துரையே முத்தம்
தாரும் பெண்ணே யென்னைச் சேரும் நித்தம் வாரும்
பாரும் மாறன் கனைகள் பாயுதே
பந்து முலைதனை பிடித்து விந்தையுடநெனையடுத்து
வாரும் ஆசைக்கிசைந்த பிறாணநாதா அனைத்து சுகந்தரலாகாதா
வாசமலர்களணி விணோதா வந்தனம் மிக
தந்தன நேசன் சந்ததமும் வந்தணையவே வாரும்
பஞ்சணையில் ரஞ்சிதமுடன் வஞ்சியென்னுடன் கொஞ்சிட நீ
வஞ்சனை செய்யலாமோ சிந்தை வாடியுனை தேடினனே
நாடியெனை கூடிடவே நாகரெத்தின தாசன் துதி நேசனே
சீனிவாசனே மோகம் மீறுதினி சகியே
முலையசைய கலையுரிவி பலவிதமா
கலவி செய்ய வாரும் வாரும் துரையே முத்தம்

## தேவி தரு

சுந்தர ஒன்னே புரியவுஞ் சனி தொட்டானோ
நிசமா விதி வசமாம் யிது சதமாம் பாலகா தோழமோ தோழமோ
என்ன தோழமோ அறிகிலேனே மகனே
மைந்தனே ஒன்னே பெத்து வளத்து வாடி தவித்து நிற்க
மனந்துடிக்க
செனம் பழிக்க பாலகா மாயமோ மாயமோ
என்னா மாயமோ மகளே சுதனே
அஞ்சு வயதினில் கொஞ்சி வளத்த
நெஞ்சம் புண்ணாகுதே அனலாகுதே மனம் வேகுதே பாலகா
அப்பனே அப்பனே எந்தன் அப்பனே மகனே சுதனே
அப்பனே ஒன்னே போல இப்பிறப்பினில் ஆரே காண்பனே தான்
அயன் விதிதான் இது சதிதான் பாலகா
ஆருமோ ஆருமோ மனதாருமோ மகனே சுதனே
ஆரூர் தன்னிலே அரைக்கவும் ஒன்னை
அயனுதன் விதியோ இது சதியோ
யென்னு கதியோ கதியோ பாலகா
அய்யனே அய்யனே எந்தன் அய்யனே மகனே சுதனே
ஆவின் கண்ணுக்கா அரைக்கவும் ஒன்னே
அயனுந்தன் விதியோ இது சதியோ கால கெதியோ
பாலகா அஞ்சுதே அஞ்சுதே மகனே சுதனே

## தேவி தரு

சுந்தர மகனே நீ விந்தையாய் அரைபட்டு சோர்ந்தாயோ மகனே
தியாகர் சூதுபோல் காணுதே யேது நான்றிகிலேனே சொல்வாய்
சுதனே
அடா சோலை கிளியே பாலா முன் செய்த தீவினையிது லோலா

வந்ததறிகிலேன் சீலா சேதியாய் வந்த மோசம் போல காணுதே
துய்யனே

யென்னா செய்வேன் அப்பா
துன்பம் வந்து மகனே நேர்ந்ததடா
முன்னால் தோழ(ச)ம் வந்து மகனே சேர்ந்துதடா
அடாபட அன்பது வயதுநில் நம்பியே பாலனே
அடைபட மனமது உருகுதே என் செய்வேன் துன்பம்

## சபை விருத்தம்

விந்தையா சோழ ராசன் மெல்லியாள் தேவி கூட
மைந்தனு மில்லை யென்று மிக்கமெ லிந்து வாடி
சிந்தையில் கிலேசத் தோடும் தியங்கியே புலம்பும் போது
அந்தமாங் குறிகள் சொல்ல அதிவித்து ரபெண்வந் தாளே

## தரு

யேழை நானே தயவு செய்து இறங்குவாய் நீயே
யாதோ கரங்கூப்பி நின்றேன் வந்திடுவாயே
ஆரடா நரனே நீ யச்சமின்றியே அடுக்கா மொழி
யாட இங்கு அமர்ந்து நின்றாயே

ஆரிழைத்த நலமோ இங்கு அடையலானே
அருமை ஐயோ யெனக்கு வந்தருள் செய்வாய் மானே
தேவரும் மூவரும் தரிசிக்க அஞ்சி திகைப்பாரே
நீயும் வந்தாய் திண்மையோ மிஞ்சி

பொற் கிண்ணம் போல் தோணுதடி பூவையே ஒ ஸ்தனம்
போற்றி செய்தே தீண்ட மனம் பொறுப்பாய் வந்தனம்

அட பேயே வாய்மூடு அனங்கனால் வாடி
ஆடுகுராய் எரியசை அகலுவாயோடி

மாறன் என்மேல் வாளி தூவி மயக்கினா கோதை
மனித்தே நபிழை பொறுத்து மருவுவாய் மாதை
சீ நாயே வாய்மூடு செபித்திடுவேனோ
சீரற்ற பிணம் போலே செய்குவே யானே

---------

